KALKI
3.3.2008 ரூ.8.00
80 பக்கங்கள்

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...



## குஜராத் டுடே

*Exclusive*

மோடியின் மூன்று நாள் முகாம்!

# "தங்கக் கோயில் தவறேதும் இல்லை!"

- வேலூர் சக்தி அம்மா பேசுகிறார்




# கல்கி 23.3.2008

05 குஜராத் டுடே

நேரடி Exclusive Report



26 "இன்னொரு ஸ்ரீதேவி"

கமல் பாராட்டு!



54 சவாலுக்குத் தயாரா ஆனந்த்?



74 "தங்கக் கோயில் தவறேதும் இல்லை"

வேலூர் சக்தி அம்மா பேசுகிறார்






**கு**ஜராத் அரசின் சிறந்த சேவையை மற்ற மாநில பா.ஜனதா அரசு பின்பற்றினாலே சிறந்த எடுத்துக்காட்டாக இருக்கும்.

**- என்.பாலசுப்பிரமணியன், சென்னை - 40**

'**ம**ன்னவனும் நீயோ வளநாடும் உன்னதோ' என்று கேட்ட ஜெயமோகன், புலவர் ரேஞ்சுக்கு உயர்ந்து விட்டார்.

**- ராகவ் ஸ்ரீனிவாஸ், சென்னை**

**இ**ந்திய அணி ஆஸ்திரேலியாவை வீழ்த்தியது அபாரம். ஆனால், தொடர் வெற்றியினால் மட்டுமே ஓர் அணியால் நம்பர் ஒன் ஆக முடியும்.

**- கே.பி.ராமன், சென்னை - 73**

'**சி**தம்பரம் திருக்குறள் சொன்னதன் நோக்கம் என்ன?' என்ற கேள்விக்கு தங்கள் பதிலில் தேர்ந்த நையாண்டி சூப்பர்.

**- மன்னை சதிரா, மன்னை**

'**ப**டுத்துக்கொண்டே படம் பார்க்கலாம்', அபிராமி திரையரங்கின் அருமையான முயற்சி! ரசிகர்கள் படம் பார்த்துக் கொண்டே தூங்கிவிடாமல் இருப்பார்களாக!

**- பி.ஆர்.மஹேந்திரநாத், சென்னை**

**ஏ**ழை-எளியோர்தான் விலைவாசி உயர்வால் மிகவும் வாடி வதங்குவர்; நடுத்தர வர்க்கத்தினர் திணறுவார்கள். தலையங்கம் டாப்!

**- ஆர்.ஏ.அமுதன், சென்னை -10**

'**ர**சிகர்மன்ற ராஜா' சங்கரின் நேர்மை, பாராட்டுக்குரியது! சூப்பர் ஸ்டாரின் ரசிகர், அவரைப் போலவே நேர்மை!

**- கே.கஸ்தூரி, வேலூர் - 6**

**தூ**றல் கவிதைகள்... குற்றாலத்துச் சாரலின் சிலிர்ப்பைத் தந்தன.

**- ச.ஆ.கேசவன், இனாம் மணியாச்சி**

# இதய சிம்மாசனத்தில் இடம்!

**சா**தனையாளர்களை கௌரவிக்கும் விதத்தில் முன்னட்டையில் ஸ்டில்களை வெளியிட்டு, இதய சிம்மாசனத்தில் இடம்



பிடித்துவிட்டமர்.

**- வெ.ராம்குமார், வேலூர்**

**சு**ஜாதா ஒரு சகாப்தம் நெஞ்சைக் கனக்கச் செய்தது. எழுத்தில் இளமைத் துடிப்பையும் மறக்கவே முடியாத சுறுசுறுப்பையும் ஏற்படுத்தியவர் சுஜாதா.

**- கா.இர.குப்புதாக, செஞ்சி**

**த**யாநிதி மாறன், முடிவெடுக்க முடியாமல் திணறுவதை அழகாகத் தொகுத்துள்ளது கல்கி.

**- ஆர்.நாகராஜன், சென்னை - 117**

**போ**லீசுக்கு ஹெலிகாப்டர் வழங்குவது பற்றிய ஜோக்குகளைப் படித்தவுடன் சிரிக்கும் சிரித்து வயிறே வலித்துவிட்டது போங்க.

**- டி.கே.சுப்பிரமணியன், திருப்பரங்குன்றம்**

**ஆ**ற்காட்டாரை குஜராத்துக்கு அனுப்ப வேண்டிய தேவையில்லை. கல்கி இதழை அவருக்கு அனுப்பி வைத்துவிட்டேன்.

**- அ.சம்பத், திருவரங்கம்**

**த**மிழகத்தில் அழுத்தமான ஓர் அமைதிப் புரட்சிக்கு கல்கியின் 'குஜராத் டுடே' வித்திடும்!

**- பி.ஜி.பி.இசக்கி, அகஸ்தியர்பட்டி**

**மோ**டியின் சாதனைகள் படிக்கும்போது மனதுக்கு மகிழ்ச்சி.

**- என்.சண்முகம், திருவண்ணாமலை**

**க**ல்கி ராஜேந்திரனின் 70 முதல் 7 வரை, நெஞ்சைத் தொடும் அற்புதப் பகுதி! விறுவிறு வென்று சென்று இதழுக்குப் பெருமை சேர்க்கிறது.

**- வள்ளியூர் ஏ.பி.எஸ்.ரவீந்திரன், நாகர்கோவில்**

**கோ**பாலபுரம் - தைலாபுரம் கூட்டணி விரிசலைத் துல்லியமாக விளக்கும் கார்ட்டூன் கலஜோர்.

**- ஸ்ரீரங்கம் கோபாலன், சென்னை - 33**




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P. ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
**4343 8888, 2225 1522, 2225 0623, 2225 1324,**

தொலைநகல் :
**044 - 22251021**

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ. 440/-**
**ஆறு மாதம் : ரூ. 220/-**

வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

# ஆறு வார அதிரடி!

# பட்டுப் புடைவை பரிசுத் திட்டம்!

இந்த வார போட்டியும் ஈஸிதான். 'குஜராத் டுடே' பக்கங்களில் அடங்கியுள்ள ஒரு முக்கியமான வார்த்தையைக் கண்டு பிடித்து எழுத, கீழேயுள்ள கட்டங்களை நிரப்புங்கள். வட்டமிட்ட எழுத்துகளை வரிசைப்படுத்தி, கடைசி கட்டங்களை நிரப்புங்கள். கூப்பனையும் நிரப்பி, 'ஆறு வார அதிரடி-2' கல்கி, 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032 என்ற முகவரிக்கு 26.3.08க்கு முன்னதாகக் கிடைக்கும்படி அனுப்புங்கள். சரியான விடையை எழுதும் ஒரு வாசகருக்கு, பாலம் சில்க்ஸ் வழங்கும் பட்டுப் புடைவை பரிசு! ஒன்றுக்கு மேற்பட்ட வாசகர்கள் சரியாக எழுதினால், குலுக்கல் முறைதான்! ஆசிரியர் தீர்ப்பே இறுதி!

'ஆறு வார அதிரடி - 2'

பெயர் : ..........................................

வயது : ...............

முகவரி: ..........................................

..........................................

..........................................

..........................................

கல்கியில் விரும்புவது : ...................

..........................................

"இரு இனங்களிடையே ...................... உருவாக்க..."

அகமதாபாத் நகரிலுள்ள நரோரா......................

'குழந்தைகள் பள்ளியில் சேர்வது இங்கே ஒரு திருவிழா' எனும் ஆசிரியர்

செய்தித்துறை உதவி இயக்குநர்

"இன்னொரு................ஆடிவிட்டுக் கிளம்பலாமே"

பேசிட்டர்...... ஆணையம்

சபாஷ் திட்டம்

# கல்கி -பாலம் சில்க்ஸ் வழங்கும் போட்டி-2





# மோடியின் மூன்று நாள் முகாம்!




## பெண் கல்வித் திருவிழா!

ஆஸ்திரேலியாவில் வசிக்கும் மகன் வீட்டுக்கு ராஜுபாய் சென்றிருந்தபோது, பேரக் குழந்தைகள் படிக்கும் பள்ளியைப் பார்த்து அசந்து போயிருக்கிறார். மகனிடம், ''நீ படிச்ச நம்ம கிராமத்துப் பள்ளிக்கூடம் இன்றுவரைக்கும் அடிப்படை வசதிகளற்ற அதே நிலையில்தான் இருக்கு'' என்று வருந்தியிருக்கிறார். தந்தையின் மனத்தைப் புரிந்துகொண்ட மகன், போர்பந்தரில் உள்ள காண்டேலா கிராமத்துப் பள்ளிக்கென, கொஞ்சம் பணமும் கொடுத்து அனுப்பி வைத்திருக்கிறார். ஊருக்குத் திரும்பியதும் ராஜுபாய் மகன் கொடுத்த பணத்தோடு தமது சேமிப்புப் பணத்தையும் சேர்த்து, தமது நிலங்களையும் மகன் படித்த அந்தப் பள்ளிக்கே கொடுத்துள்ளார். அடிப்படை வசதிகளோடு கூடிய ஒரு கட்டடத்தை, பள்ளிக்கெனக் கட்டிக் கொடுத்திருக்கிறார். எல்லாவற்றுக்கும் மேலாக சிகரம் வைத்தாற்போல், வகுப்புக்கு ஒரு கம்ப்யூட்டர் வேறு. ''சீருடை அணிந்து பள்ளிக்குச் செல்லும் குழந்தைகளின் முகத்தில் என் பேரக் குழந்தைகளைப் பார்க்கிறேன்'' என்று நெகிழ்கிறார் ராஜுபாய்

ராஜுபாய் தொடங்கிய ஆரம்பப் பள்ளியில், பத்தாண்டுகளுக்கு முன்பு மாணவியர் எண்ணிக்கை எண்பதுதான்! கடந்த சில ஆண்டுகளில் 267ஆக உயர்ந்திருக்கிறது.







● தலைமை ஆசிரியர் கீர்த்தி



● பெற்றோர் - ஆசிரியர் சங்கம்...



● ககன் பமோதன்

இந்த முன்னேற்றத்துக்குக் காரணம், குஜராத் அரசின் 'கன்யா கேல்வாணி திட்டம்'தான் என்கின்றனர் அந்தக் கிராமத்தைச் சேர்ந்தவர்கள். 2002ல் அறிமுகப்படுத்தப்பட்ட இந்தத் திட்டத்தின் முக்கிய நோக்கமே, அனைத்துப் பெண் குழந்தைகளையும் பள்ளியில் சேர்ப்பதுதான். இதில் மாற்றுத்திறன் படைத்த பெண் குழந்தைகளும் அடக்கம். இந்தத் திட்டம், துவக்கப்பட்ட இரண்டே ஆண்டுகளில் இலக்கை எட்டிப் பிடித்திருக்கிறது!

எப்படி இது சாத்தியமாயிற்று...?

"ஜூன் மாதம்தான் பள்ளியில் சேர்க்கை நடைபெறும் என்றாலும், ஜனவரி மாதமே குழந்தைகளின் அம்மாக்களைச் சந்தித்து, பெண் குழந்தையைப் படிக்க வைக்க வேண்டிய அவசியத்தை வலியுறுத்துவோம். 'மூத்த பெண்ணைப் பள்ளிக்கு அனுப்பிவிட்டால் சின்னக் குழந்தையை யார் கவனிப்பது? நாங்கள் எப்படி வேலைக்குச் செல்வது?' என்ற கேள்வியைக் கேட்டனர் பெரும்பாலான பெற்றோர். 'உங்கள் சின்னக் குழந்தையுடன் பெரிய பெண் பள்ளிக்கு வரலாம்' என்றவுடன் ஒப்புக்கொண்டனர். சின்னக் குழந்தைகளைப் பார்த்துக்கொள்ளவும் ஏற்பாடு செய்தோம். கூடவே, மாணவர்களுக்குக் கைத் தொழிலையும் சொல்லிக் கொடுத்தோம். பெற்றோர் ஆசிரியர் சங்கம் போல, தாய்மார் ஆசிரியர் சங்கமும், மாற்றுத்திறன் படைத்த குழந்தைகளின் பெற்றோர் சங்கமும் ஏற்படுத்தினோம்'' என்கிறார் தலைமை ஆசிரியர் கீர்த்தி.

''குழந்தைகள் பள்ளியில் சேர்வது இங்கே ஒரு திருவிழாவாகவே நடக்கும். படிக்கும் பிள்ளைகள் எல்லோரும் கல்வியின் அவசியத்தை வலியுறுத்தி, கோஷங்களை எழுப்பிய படி ஊர்வலமாகப் பள்ளியை நோக்கி வருவார்கள். அந்த ஊர்வலத்தில் பொதுமக்களும், புதிதாகப் பள்ளியில் சேரவிருக்கும் குழந்தைகளும் இணைவார்கள். அவர்களுக்கென புதிய ஸ்கூல் பை, பரிசுப் பொருட்களுடன், ஓர் ஆசிரியர் காத்திருப்பார்'' என்கிறார் ஆசிரியர் ககன் பமோதன்.

''தனியார் பள்ளியில் கல்வித்தரம் அரசாங்கப் பள்ளியிலேயே கிடைப்பதால்,

அங்கே படித்த என் பிள்ளைகளை அரசாங்கப் பள்ளியில் சேர்த்துவிட்டேன். இதனால், எனக்கு மாதம் ஐந்நூறு ரூபாய் சேமிப்பாகிறது'' என்கிறார் நீலம் கணேஷ்!

ஒவ்வோர் ஆண்டும் ஜூன் மாதம் 14 முதல் 17 வரை குழந்தைகளைப் பள்ளியில் சேர்க்கும் திருவிழா குஜராத்தில் நடக்கிறது. இதில் மாநில முதல்வர் நரேந்திர மோடியும் கலந்து கொள்கிறார். மாநிலத்தில், பெண்களின் கல்வி குறித்த விழிப்புணர்வு குறைவாக உள்ள, ஏதேனும் ஒரு கிராமத்தில் அந்த மக்களுடன் முகாமிடுகிறார்! பெண்கள் கல்வி கற்க வேண்டிய அவசியத்தை வீடு வீடாகச் சென்று வலியுறுத்துகிறார்.

பெற்றோர் தங்களது பெண் குழந்தைகளையும் பள்ளியில் சேர்க்க வேண்டியதன் அவசியத்தை உணர்கின்றனர். கடந்த 2006-07ல் பள்ளியில் சேர்க்கப்பட்ட 6.5 லட்சம் குழந்தைகளுள் 3.12 லட்சம் பேர் பெண்கள். மிகவும் பின்தங்கிய கிராமப் பகுதிகளில் வசிக்கும் பெண் குழந்தைகள், பத்தாம் வகுப்புத் தேர்வை முடிக்கிறபோது, அவர்களுக்கு ஆயிரம் ரூபாய் கையில் கிடைக்கிற வகையில் ஒரு பத்திரம் தரப்படுகிறது. இதனை ஏழாம் வகுப்பு படிக்கிறபோது கையில் தந்துவிடுவதால், பெண் குழந்தைகள் பள்ளியை விட்டு நிற்பது அடியோடு குறைந்துவிட்டது!



# பூகம்பமா..? ஜூஜூபி!

## புஜ் பெற்ற புனர்வாழ்வு!



''இன்னொரு கேம் ஆடிவிட்டுக் கிளம்பலாமே'' என்று நண்பர்களிடம் சொல்லிவிட்டு, பந்தைத் தூக்கிப் போட்டு பாட்மிட்டன் மட்டையில் அடிக்கப் போனார் டாக்டர் ஞானேஸ்வர ராவ். ஆனால், அவர் கையிலிருந்து மட்டை நழுவியது; காலுக்குக் கீழே பூமி அதிர்ந்து குலுங்கத் துவங்கியது. புரிந்துவிட்டது, பூகம்பம்! புஜ் நகரம்

# குஜராத் டுடே

*Exclusive*

● பூகம்ப புஜ்

முழுவதையும் மஞ்சளும் வெண்மையும் கலந்த புகை விழுங்கிக்கொண்டிருந்தது. வேர்க்க விறுவிறுக்க வீட்டை நோக்கிக் கிளம்பியிருக்கிறார் டாக்டர்.

''நல்லவேளை, வீட்டிலிருந்தவர்களுக்கு எந்த ஆபத்தும் இல்லை. ஆனால், ஏழு கிலோ மீட்டரைத் தாண்டி எப்படி வீட்டுக்கு வந்தேன் என்று இன்று வரை நினைவில்லை'' என்கிறார். ''எனது மருத்துவமனைக்குச் சிறிய பாதிப்பு தான். மக்கள் எங்களை நோக்கி வர ஆரம்பித்தனர். கூட்டம் கட்டுக்கடங்காது போகவே, எல்லோரையும் ஜுப்ளி மைதானத்துக்கு வரச் சொல்லிவிட்டு, மருந்துப்பெட்டிகள், தேவையான உபகரணங்களோடும் உதவியாளரோடும் நாங்கள் போனோம். ஒரே கூச்சல், குழப்பம். அப்படிப்பட்ட இடர்ப்பாடுகளுக்கு மத்தியிலும் மனிதநேயம் காத்த இருவரை என்னால் மறக்கமுடியாது'' என நெகிழ்கிறார் டாக்டர்.

''அடிபட்ட ஒரு குழந்தையைத் தோளில் போட்டுக்கொண்டு, 'டாக்டர் உயிர் இருக்கா, இல்லையா? என்பதைக் கூறுங்கள். நான், என் வீட்டிலுள்ளவர்களைக் கவனிக்க வேண்டும்' என்று சொன்ன பெரியவர் ஒருவர். 'என்னை விட மோசமாக அடிப்பட்டவர்கள் இங்கு நிறைய பேர் இருக்கிறார்கள். அவர்களை முதலில் கவனியுங்கள் டாக்டர்' என்று சொட்டிக் கொண்டிருந்த தம் இரத்தத்தைத் துடைத்துக்கொண்டே சொன்னார் மற்றொருவர். இந்த இருவரையும் மனதுள்ளவரை மறக்க முடியாது'' என்கிறார்.



● [illegible]

''அரக இயந்திரம் விழித்துக்கொண்டது. ஜுப்ளி மைதானத்திலேயே, 100 படுக்கைகள் கொண்ட மருத்துவமனை தயாரானது. செய்தி வெளியில் பரவ, உலகத்தின் அத்தனை பகுதிகளிலிருந்தும் புஜ்ஜை நோக்கி நேசக் கரங்கள் நீண்டன. அத்தியாவசியப் பொருட்கள் வந்து குவிய, டாக்டர்கள், ஊழியர்கள் நூற்றுக் கணக்கில் நிவாரணத் தொண்டாற்றி வந்தனர். 'கட்ச் நவநிர்மாண்', 'இஸ்லாமிய நிவாரணக் குழு' உட்பட நூற்றுக்கணக்கானோர் களத்தில் குதித்தனர். பிறகு நிலைமை கொஞ்சம் சீரானது. ஏழு வருடங்கள் கழித்துத் திரும்பிப் பார்க்கையில், புஜ் மக்களைப் பற்றி ஒன்று புரிகிறது. இவர்கள் ஃபீனிக்ஸ் பற



● ஜுப்ளி மைதானம்

நன்றி



● புஜ் நகரப் பார்வை



● திருப்புகழ் ஐ.ஏ.எஸ்.



● பொது மருத்துவமனை

வைக்கு ஒப்பானவர்கள். அத்தனை இழப்புகளையும் உள்வாங்கிக் கொண்டு புதிய 'புஜ்'ஜை நிர்மாணித்துவிட்டனர்'' என்று பெருமிதப்படும் டாக்டர் ஞானேஸ்வரால், கை, கால் இழந்தோருக்கு லேட்டஸ்ட் டெக்னாலஜி கொண்ட செயற்கை கை, கால் பொருத்தி சிகிச்சை அளித்து வருகிறார்.

ஜனவரி 26, 2001 தேதியை குஜராத் மக்கள் மறக்கவே விரும்புகிறார்கள். 'பூகம்ப பாதிப்பிலிருந்து குஜராத் மீள முப்பது ஆண்டுகள் பிடிக்கும்' என்றனர் நிபுணர்கள். ஆனால், ஏழே ஆண்டுகளில் புஜ் எழுந்து நின்றதைப் பார்த்து உலகமே ஆச்சர்யத்தில் வாய் பிளந்தது!

குஜராத்தைப் புனரமைக்க மத்திய அரசிடமிருந்தும், உலகின் பல்வேறு நிதி நிறுவனங்களிடமிருந்தும் நிதிகள் கணிசமாகவே வந்தன. பாதிக்கப்பட்டவர்களுக்கு இரண்டு லட்சத்துக்கும் அதிகமாக வீடுகள், பள்ளி, கல்லூரி, மருத்துவமனை, சாலைகள் என அனைத்தும் புதுப்பொலிவு பெற்றன.

''எதிர்காலத்தில் பூகம்பம் ஏற்பட்டால் அதைத் தாங்கக்கூடிய கட்டடங்களைக் கட்டும் தொழில்நுட்பத்தை 600 பொறியாளர்களும், 29,000 மேஸ்திரிகளும் பயின்றிருக்கின்றனர். இதுபோன்ற துயரச் சம்பவங்களைச் சமாளிக்க, 'பேரிடர் நிர்வாக ஆணையம்' ஒன்று ஏற்படுத்தப்பட்டு, அதற்கெனத் தனிச் சட்ட திட்டங்கள் இயற்றப்பட்டிருக்கின்றன. இதில் மாவட்ட ஆட்சித் தலைவர்களுக்குக் கூடுதல் அதிகாரம் உண்டு'' என்கிறார் பேரிடர் நிர்வாக ஆணையத்தின் இணைத் தலைமை செயல் அதிகாரி திருப்புகழ், ஐ.ஏ.எஸ். இவர், நமது தமிழ்நாட்டு ஐ.ஏ.எஸ். அதிகாரியான இறையன்புவின் சகோதரர்.

''10,000 கோடிக்கும் அதிகமாக முதலீடு உள்ள தொழில் நகரமாக புஜ் மாறிவிட்டது. இப்போது மக்கள் வேலை வாய்ப்புக்காக இங்கு குடியேற ஆரம்பித்துவிட்டனர். நர்மதா நீர், கட்ச் மக்களின் தாகத்தைத் தணிக்க நீண்ட தூரம் பயணப்பட்டு வருகிறது'' என்கிறார் செய்தித்துறை உதவி இயக்குநர் பாஸ்கர் அந்தாணி.

உண்மையிலேயே புஜ் நகர மக்கள் ஃபீனிக்ஸ் பறவைகள்தான்!

**குஜராத் டுடே** *Exclusive*

# அண்ணன் தம்பிங்க அடிச்சுக்குவோமா?

## ஆறாத ரணம்!

அகமதாபாத் நகரிலுள்ள நரோரா பாடியா. குழந்தைகளுக்கு மதிய உணவு கொடுத்துவிட்டு ஜகிரா பானு, சற்று உறங்கலாம் என்று பாயை எடுத்தபோதுதான் அந்தக் கலவரச் சம்பவம் நடந்தது. (மார்ச் 1, 2002)

ஒரு பெருங்கூட்டம், கையில் நீண்ட வாளுடனும் இன்னும் பெரிய பெரிய ஆயுதங்களுடனும் புகுந்து, அந்தக் குடிசைப் பகுதியில் எதிர்ப்பட்டோரையெல்லாம் வெட்டித் தள்ளியது! ஒரு மணி நேரத்தின் முடிவில் தெருக்கள்தோறும் ஆங்காங்கே வெட்டிச் சாய்க்கப்பட்ட பிணக் குவியல்கள். குழந்தையைத் தூக்கிக்கொண்டு திசை தெரியாமல் ஓடியிருக்கிறார் ஜகிரா பானு.

''நாங்கள் என்ன பாவம் செய்தோம். எங்களுக்கு ஏன் இந்தக் கதி?'' - இன்றும் கண்ணீர் வடிக்கின்றனர் ஜகிராவைப் போல ஆயிரக்கணக்கானோர். இவர்கள் பெரும்பாலும் ஆட்டோ ஓட்டும் கூலித் தொழிலாளிகள்தான். ''நரோரா பாடியாவில் 3000 குடிசைகள் எதற்காகக் கொளுத்தப்பட்டன என இன்று வரை தெரியவில்லை. கொடூரத் தாக்குதல் எதன் பொருட்டு நிகழ்ந்தது? இன்று வரை விடை இல்லை. மீண்டும் நாங்கள் வாழ்ந்த பகுதிக்குப் போக வழி இல்லை.'' - பேசும்போது குரல் நடுங்கி, கண்ணீர் தளும்புகிறது அஸ்லம் பாய் ஷேக்குக்கு.

ஜீகாப்புரா கிராமம், ஏக்தா வளாகத்தில், கோத்ரா பின்விளைவு கலவரங்களால் பாதிக்கப்பட்ட 135 குடும்பங்கள் வசிக்கின்றன. ''கலவரம் முடிந்த பிறகு பள்ளியில் தங்க வைக்கப்பட்ட நாங்கள், குடியிருந்த பகுதிக்குத் திரும்பிப் போக அரசாங்கம் எந்த ஏற்பாடும் செய்யவில்லை. இஸ்லாமிய நிவாரணக் குழு தான் எங்களைப் பாதுகாத்து வருகிறது'' என்கிறார் ஆக்னைஜ் கிராமத்தைச் சார்ந்த











சையத் சாஹிப். "எங்கள் பிஞ்சுக் குழந்தைகளின் பொருட்டுதான் வாழ்கிறோம். மற்றபடி, வாழ்க்கையின் மீது பிடிப்பில்லை'' என்கிறார் இஷாக். ''இந்த ஆறு, ஏழு வருடங்களில் பத்திரிகைகாரர்களைப் பார்த்துப் பார்த்துச் சலித்துப் போய்விட்டது'' என்கிறார் ஆட்டோ ஓட்டுநர் ரஹீத்.

குஜராத்தின் பத்தொன்பது மாவட்டங்களில் பரவிய கலவரங்களில் இறந்தோர் எண்ணிக்கை சுமார் 2000. இதில் எரிக்கப்பட்டவர்கள் 394. 30,000 கட்டடங்கள் நொறுக்கப்பட்டன. இவற்றுள் 20,000, சிறுபான்மையினருடைய தொழில் நிறுவனங்கள். 600 மசூதிகள் நீக்கிரையாயின. வன்முறை நிகழ்ந்த மூன்று நாட்களுக்குப் பிறகு, காவல்துறை களத்தில் இறங்கி கண்துடைப்புக்காகச் சில நடவடிக்கைகளை எடுத்திருக்கிறது. வழக்குகள், அறிக்கைகள் என

## "எங்கள் பிஞ்சுக் குழந்தைகளின் பொருட்டுதான் வாழ்கிறோம். மற்றபடி வாழ்க்கையின் மீது பிடிப்பில்லை"

வழக்கமான சடங்குகள் தொடர, பாதிக்கப்பட்டவர்களின் கண்ணீர் மட்டும் நின்றபாடில்லை. சமீபத்தில்தான் கணிசமான நிவாரணத் தொகை உச்சநீதிமன்ற ஆணைபடி வழங்கப்பட்டிருக்கிறது.

**"வ**றுமைக் கோட்டுக்குக் கீழ் வாழும் முஸ்லீம்கள்தான் அதிக அளவில் பாதிக்கப்பட்டிருக்கின்றனர். பாதிக்கப்பட்டவர்களுக்குக் கொடுக்கப்பட்ட இழப்பீடு தொகையோ மிகக் குறைவு. வன்முறை நிகழ்த்த பயிற்சி அளித்திருப்பார்களோ என்ற சந்தேகம் இன்றும் உண்டு. ஏனெனில், மதநல்லிணக்கத்தைச் சிதைக்கும் முயற்சிகள், கடந்த பதினைந்து வருடங்களாக இங்கே மறைமுகமாக நடைபெற்று வருகின்றன. ஆனாலும், குஜராத் மக்கள் மீது

# நான்-ஸ்டாப் நரேந்திர மோடி - 2

**"எனக்கு அளிக்கப்படும் அன்பளிப்புகள் அனைத்தும் ஏலம் விடப்பட்டு, வருகின்ற தொகை கன்யா கேல்வாணி திட்டத்துக்குச் செலவழிக்கப்படுகிறது!"**

**- மோடி சிறப்புப் பேட்டி 20.4.2008 கல்கி இதழில்...**



எங்களுக்கு நம்பிக்கை உண்டு. பிளவுபட்ட இதயங்கள் காலப் போக்கில் ஒன்று சேர்ந்துவிடும். ஏனெனில், கலவரத்துக்கு முந்தைய நாள் வரை ஹிந்து- முஸ்லிம்கள் அண்ணன்- தம்பிகளாகத்தான் இருந்தோம்'' என்கிறார் ஜமாத் - இ - இஸ்லாமிக் ஹிந்த் அமைப்பின் மாநிலத் தலைவர் ஷஃபி மத்னி.

''நாங்கள் கேட்பதெல்லாம் 'எங்களுக்கு நீதி வழங்குங்கள்' என்பதுதான்'' என்று கூறும் மத்னி, ''இப்போது இஸ்லாமியர்கள் பலர் மோடிக்கு வாக்களித்திருக்கிறார்கள். ஆனால், எங்களில் ஐம்பது சதவிகிதத்தினர் அச்சத்தில் வாக்களிக்கப் போகவேயில்லை! இரு இனங்களிடையே நல்லிணக்கத்தை உருவாக்க சத்பாவ்னா யாத்திரை நடத்தியிருக்கிறோம். இனி இழப்பதற்கு எங்களிடம் எதுவும் இல்லை. அதனால் பயமும் இல்லை. ஆனால், ஒரு வெறுமை... நாங்களும் இந்த நாட்டின் குடிமக்கள்தான். விடுதலைப் போராட்டத்தில் எங்கள் பங்கும் கணிசமானது. எங்களை இரண்டாம்தர குடிமக்களாகக் கருதுவது கவலை தருகிறது...'' என்றார்.

இதுகுறித்து குஜராத் அரசு தரப்பில் விசாரித்தபோது, 'உச்சநீதிமன்ற ஆணையின்படி எல்லாம் நடந்துகொண்டிருக்கின்றன. இது குறித்து பேசினால் நீதிமன்ற அவமதிப்புக்குள்ளாக நேரிடும். எனவே பொறுத்திருப்போம்' என்றனர். ஆனால், மக்களின் மனத்தில் புரையோடியிருக்கும் ரணத்தை இந்த ஆணையால் என்ன செய்துவிட முடியும்!

*(பயணம் தொடரும்)*

## ஸ்பீட் போஸ்டுக்கு சி.டி. பரிசு!

**விரைந்து வரும் 'குஜராத் டுடே' பற்றிய முதல் இரண்டு விமர்சனங்களுக்கு, துக்ளக் ஆண்டு விழாவில் மோடி ஆற்றிய உரையின் சி.டி பரிசு!**

**சென்ற வார சி.டி பரிசு பெறுவோர்:**
**பி.ஜி.பி. இசக்கி, அகஸ்தியர் பட்டி,**
**அ. சம்பத், திருவரங்கம்,**
**என்.சண்முகம், திருவண்ணாமலை.**





# கல்கி



2008 மார்ச் 23
சர்வஜித் பங்குனி 10
மலர் : 66
இதழ் : 34

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்.*

## சோனியாவின் ஒப்புதல் வாக்குமூலம்!

**கா**ங்கிரஸ் எம்.பி.க்களைச் சந்தித்துப் பேசிய சோனியா காந்தி தெளிவுபடுத்திவிட்டார் - 60,000 கோடி ரூபாய் விவசாய கடன் தள்ளுபடி, தேர்தல் நோக்கில் செய்யப்பட்டது என்று ஒப்புதல் வாக்குமூலமே அளித்துவிட்டார்!

வரிப்பணத்தைக் கொண்டு மத்திய அரசு வழங்கும் இந்த 'மாபெரும்' சலுகை குறித்துத் 'தம்பட்டமடித்து' காங்கிரஸ் தொண்டர்கள், கட்சியின் செல்வாக்கை வளர்க்க வேண்டுமாம்! மேலும், தனிப்பட்ட செல்வாக்கு இல்லாதவர்களுக்குத் தேர்தல் டிக்கெட்டே கிடையாது என்றும்கூடச் சொல்லியிருக்கிறார் சோனியா!

தலைவர்களுக்கு மக்களிடையே செல்வாக்கு உருவாகவோ வளரவோ வேண்டுமானால், மக்களுடைய அன்றாட வாழ்வு மேம்படுவதற்கும், அவர்கள் வாழும் பகுதியின் முன்னேற்றத்துக்கும் அத் தலைவர்கள் பல விதங்களில் பங்களிக்க வேண்டும். ஆனால், இன்றைக்கு இந்த நோக்கில் சாதித்த காங்கிரஸ் தலைவர் என்று யாரேனும் ஒருவரைக்கூட, நாம் சுட்டிக்காட்ட முடியவில்லை. எல்லா மாநிலங்களிலும் உட்கட்சிப் பூசல் மலிந்துபோய், கட்சிக் கட்டமைப்பு கலகலத்துக் கிடக்கிறது. இதற்கு முக்கியமான காரணம், உட்கட்சி ஜனநாயகம் என்கிற அடிப்படையே காங்கிரஸில் காணாமல் போய்விட்டதுதான். எங்கோ டெல்லியில் இருந்து கொண்டு, தம்மைச் சுற்றியுள்ள நாலு பேர் தரும் ஆலோசனைகளின் அடிப்படையில் சோனியா காந்தியே, அனைத்து நிலைகளுக்குமான தலைவர்களை நியமிக்கிறார். இதனால் கட்சியில் பிளவும் மனத்தாங்கலும்தான்






விளைகின்றன. சமீபத்தில்கூட, ஆளுநராக இருந்துவந்த எஸ்.எம்.கிருஷ்ணாவை மீண்டும் கட்சிப்பணிக்கு அழைக்கும் தவறை இழைத்து, அதன் மூலம் கர்நாடக காங்கிரஸுக்குள் அதிருப்தியைக் கூட்டியிருக்கிறார் சோனியா காந்தி!

நேரு பாரம்பரியம் என்கிற 'சென்டிமென்ட்' பலத்தை நம்பி எத்தனை காலம் காங்கிரஸ் கட்சியைக் கட்டிக்காக்க முடியும்? வோட்டுப் பெற முடியும்? ராகுல் காந்தி கிராமங்களில் தங்கி மக்களோடு மக்களாகப் பழகுவதன் மூலம் அனுபவம் பெறலாம். ஆனால், மக்களுக்கு அதனால் என்ன பயன்?

ஒரு கட்சித் தலைவர், இதர தலைவர்கள், உபதலைவர்கள், மாவட்ட தலைவர்கள் வாயிலாக மக்களிடம் பேசி, அவர்களுடைய குறைகளை அறிய வேண்டும்; அவற்றை நிவர்த்தி செய்ய முயற்சிகள் மேற்கொள்ள வேண்டும். பரவலாக நாடெங்கும் பயணம் செய்து, சமூக - பொருளாதார முன்னேற்றத்தில், கட்சி உறுப்பினர்கள் அனைவரையும் ஈடுபடுத்தும் வகையில் உத்வேகம் எழ பேச வேண்டும். இவை எதற்குமே காங்கிரஸில் இடமில்லை; சோனியா, ராகுல் காந்தியிடம் இதற்கான முயற்சியும் இல்லை.

உட்கட்சி ஜனநாயகமும் இன்றி, தனிநபர் ஆளுமையின் பலமும் இன்றி காங்கிரஸ் பல மாநில தேர்தல்களிலும் சமீப காலத்தில் வரிசையாகத் தோல்வியுற்றதில் அதிசயமென்ன!

''இந்தத் தோல்விகளிலிருந்து பாடம் கற்க வேண்டும்'' என்று இப்போது தமது கட்சியினரை எச்சரிக்கும் சோனியா காந்தி, தாம் மட்டும் பாடம் கற்கவே இல்லை! உட்கட்சி ஜனநாயகத்துக்கு உரிய இடம் அளித்திருந்தால், கட்சியில் உள்ள இளைஞர்களுக்கு மக்களிடையே செல்வாக்கு வளர்ந்திருக்கும்; மக்களுக்கும் கட்சிமீது அபிமானம் வளர்ந்திருக்கும்; கொள்கை அளவில் வாதப் பிரதிவாதங்கள் மூலம் தெளிவு பிறந்திருக்கும். ஆட்சியின் திட்டங்கள் மக்களைச் சென்றடைய வழி பிறந்திருக்கும்.

இவற்றையெல்லாம் இப்போதேனும் தாமதமின்றி கவனிக்காவிட்டால் அடுத்து வரும் மாநில, நாடாளுமன்ற தேர்தல்களில் செல்வாக்கு மிக்க வேட்பாளர்கள் கிட்டமாட்டார்கள்; செலவு செய்யும் தகுதியுள்ளவர்களுக்குத்தான் அந்த வாய்ப்புகள் போய்ச் சேரும்! சோனியா, மேலும் ஏமாற்றங்களையே சந்திக்க நேரும்! ●

# 'வரலாறு' புகழ் தலைவர்




"தலைவர் வரலாறு பட சி.டி.யை கோயிலுக்கு கொண்டு போறாரே, ஏன்?"

"வரலாறு 'படைக்க'ப் போறாராம்!"

- தஞ்சை தாமு

"படத்துல பேய் வேஷம் போடறவ இன்னிக்கு கால் ஷீட் கிடையாதுன்னுட்டார்."

"பேய்க்கு 'கால்'தான் கிடையாது. கால் ஷீட் கூடவா கிடையாது."

- வெ.சீதாராமன்





"ஏன் காலங்கார்த்தால என் மேலே தண்ணி தெளிக்கிற?"

" எங்கப்பாதான் உங்களைப் பூ போல் பார்த்துக்கணும்னு சொல்லியிருக்காரு."

- ஆர்.தங்கராஜ்



"எனக்கு பந்தாவெல்லாம் கிடையாது. உங்க வீட்டுக்கு நீ போயிட்டு வா."

"உங்களுக்கு வர பிடிக்கலைன்னா லக்கேஜையாவது பஸ் ஸ்டாண்ட் வரைக்கும் எடுத்துட்டு வாங்க."

- சீர்காழி வி.ரேவதி

"டாக்டர் ஆபரேஷன்ல ஒரு தப்பு நடந்துடுச்சு."

"ஏன்? என்னாச்சு நர்ஸ்?"

"பேஷண்ட்டுக்குப் பதிலா விசிட்டருக்கு ஆபரேஷன் பண்ணிட்டோம்."

- சென்னிமலை சி.பி. செந்தில்குமார்



# தன்னார்வத் தொண்டர்களுக்கு ஓர் அரிய வாய்ப்பு...

உதவும் காரங்கள் என்ற தொண்டு நிறுவனம் ஆதரவற்ற குழந்தைகளுக்கும் மற்றவர்களுக்கும் அடைக்கலம் கொடுத்துக் காப்பாற்றிவருவது குறித்து நீங்கள் அறிந்திருப்பீர்கள் என்று நம்புகிறோம். பொதுமக்களின் நன்கொடையைக் கொண்டு இயங்கிவரும் இந்த அமைப்பு, பெற்றோரால் கைவிடப்பட்ட குழந்தைகள், சமூகத்தால் ஒதுக்கப்பட்ட பெண்கள், முதியவர்கள், மனநலம் பாதிக்கப்பட்டோர், மூளை வளர்ச்சி குறைந்த குழந்தைகள், ஆகிய 1800 பேர் கொண்ட மாபெரும் குடும்பத்தைப் பல ஆண்டுகளாக ஆதரவளித்துக் காப்பாற்றி வருகிறது. இந்த அன்புப் பணியில் ஆர்வத் தொண்டர்களாகச் சேர்ந்து பணியாற்ற உங்களுக்கும் வாய்ப்பு உண்டு.

35 வயது முதல் 50 வயதுக்கு உட்பட்டவர்கள் விண்ணப்பிக்கலாம். உணவும் தங்குவதற்கான வசதியும் கிடைக்கும். அதோடு உதவித்தொகையாக மாதம் ரூ.1,000 அளிக்கப்படும். ஆதரவற்ற மக்களுக்கு அன்புடன் தொண்டாற்றும் ஆர்வமுள்ளவர்கள் தொடர்பு கொள்ளலாம்.

பிள்ளைகளைப் பேணிக் காப்பதற்கு தாய்மார்கள், உடனிருந்து ஆதரவளிப்போர், ஆசிரியர்கள், காவலர்கள், சமையற்காரர்கள், செவிலியர்கள், தோட்டக்காரர்கள், உதவியாளர்கள் ஆகியோருக்கு முன்னுரிமை அளிக்கப்படும்.

புகைப்படத்துடன் விண்ணப்பிக்கவும்.
விண்ணப்பங்கள் அனுப்பவேண்டிய முகவரி.



**உதவும் கரங்கள்**
460 என்.எஸ்.கே.நகர்
அரும்பாக்கம், சென்னை 600 106
தொலைபேசி எண்கள் 2621632l 26260818
99401 88011



துணிச்சலுடன் பல மாறுபட்ட திரைப்படங்களை எடுத்து, தமிழ்த் திரைப் படத்துறையில் பல திருப்பங்களை ஏற்படுத்தியவர் இயக்குனர் சிகரம் கே.பாலசந்தர். அவருடைய கவிதாலயாவின் சார்பில், தயாரிக்கத் திட்டமிட்டிருந்த முதல் படத்தின்





# பாலசந்தர் கொடுத்த இன்ப அதிர்ச்சி!

ஹீரோ ரஜினி. என்னை அழைத்து அந்தப் படத்தை இயக்கும்படி கூறியதும் எனக்கு இன்ப அதிர்ச்சி!

''உங்கள் சொந்தக் கம்பெனி; நீங்களே முதல் படத்தை இயக்கினால் நன்றாக இருக்குமே?'' என்று எனது கருத்தைத் தெரிவித்தபோது, அவர், ''எனது பாணி கமர்ஷியலான பாணி இல்லை; நீங்கள் வர்த்தக ரீதியில் வெற்றிபெற்ற படங்களை எடுத்து நிரூபித்திருக்கிறீர்கள். ரஜினி நடிக்கும் படத்தை நீங்கள் இயக்கும்போது, அந்தக் காம்பினேஷன் வர்த்தக ரீதியில் நல்ல வெற்றி பெறும் படமாக அமையும். எனவே, நீங்கள் இயக்குங்கள்'' என்று கூறினார்.

மேலும்,''நான் ஒரு படத்தை இயக்கும் போது, அந்தப் படத்தின் தயாரிப்பாளர் எனக்கு எப்படிப்பட்ட சுதந்திரத்தைத் தரவேண்டுமென்று எதிர்பார்ப்பேனோ, அதே சுதந்திரத்தை உங்களுக்கு நான் தருவேன். எதைப் பற்றியும் பயப்படாமல் இயக்குங்கள்'' என்று தைரியமூட்டினார். அந்தப் படம் தான் 'நெற்றிக்கண்'.

பாலசந்தர் சொன்ன கதையில், ரஜினிக்கு அப்பா மகன் என்று



இரு வேடங்கள். வழக்கமாக, அப்பா நல்லவராக இருப்பார். மகன் கெட்டவனாக இருப்பான். கடைசியில், அப்பாவின் முயற்சியால் மகன் திருந்துவான். ஆனால், நல்லவனான மகன், கெட்டவரான தமது அப்பாவைத் திருத்துவதுதான் பாலசந்தரின் கதை. ''இரண்டு மாறுபட்ட கேரக்டர்களிலும் ரஜினியின் நடிப்பாற்றலும், அதே சமயத்தில் ஸ்டைலும் வெளிப்படும்படியாகச் செய்யுங்கள்'' என்று கூறினார்.

ரஜினியிடம் கதையைச் சொன்னபோது, அவர் இரண்டு கேரக்டர்களையும் நன்கு





● 'நெற்றிக்கண்' படத்தில்

உள்வாங்கிக்கொண்டு, ''இந்த இரண்டு கேரக்டர்களுமே எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு. நடிக்க நல்ல ஸ்கோப் உள்ள கேரக்டர்கள்'' என்று சொன்னார். சொன்னபடி நடிப்பில் அசத்தினார். ஒரு ரஜினிக்கு ஜோடி லட்சுமி; இன்னொரு ரஜினிக்கு மேனகா. இன்னொரு முக்கியமான பாத்திரத்தில் சரிதா. இப்போது அதிரடி ஆக்ஷன் ஹீரோயினாக படங்களில் நடித்துக் கொண்டிருக்கும் விஜயசாந்தியும் ஒரு நல்ல கேரக்டரில் நடித்தார்.

பாலசந்தர், ''படத்துக்குச் செலவழிப்பதற்குத் தயங்க வேண்டாம்; எவ்வளவு வேணுமோ தயங்காமல் செலவு செய்யுங்கள்'' என்றார். படம் முடிந்த பிறகு, அவருக்குப் போட்டுக் காட்டினேன். ''நான் எதிர்பார்த்ததுபோலவே, மிகச் சிறப்பாக படம் எடுத்திருக்கிறீர்கள். நான் சொன்ன




# எஸ்.பி.முத்துராமன்

கதைக்கு விறுவிறுப்பான திரை வடிவம் கொடுத்திருக்கிறீர்கள். ரஜினியின் நடிப்பாற்றலுக்கு 'அப்பா' நடிப்பும் ஸ்டைலும் சாட்சி. அத்தனை பேரும் நன்றாக நடித்திருக்கிறார்கள்'' என்று மனதாரப் பாராட்டினார். இயக்குனர் சிகரத்தின் பாராட்டு, எங்களுக்குக் கிடைத்த ஆஸ்கார் விருதல்லவா!

'நெற்றிக்கண்' படத்தைப் பற்றி நினைத்தாலே எனக்கு ஒரு சம்பவம் நினைவுக்கு வரும். ஒரு நாள் பாலசந்தர் என்னிடம், '''நெற்றிக்கண்' படத்தின் ஷூட்டிங் பார்க்க நான் வரலாமா?'' என்றார். ஓ! தாராளமாக வாருங்கள்! எப்போது வருகிறீர்கள்?'' என்று கேட்டேன். அவரோ, ''படத்தின் தயாரிப்பாளராக நான் உங்கள் ஷூட்டிங்குக்கு வரப் போவதில்லை; ஓர் இயக்குனர் என்ற முறையில்தான் வரப் போகிறேன்'' என்று சின்ன சஸ்பென்ஸ் கொடுத்தார். அவரே தொடர்ந்து பேசினார், ''உங்கள் படங்களில் இடம் பெறுவது போல, சண்டைக் காட்சிகளை எல்லாம் என்னால் எடுக்க முடியாது. எனவே, நீங்கள் எப்படிச்



# ரசிகர் மன்ற ராஜாக்கள்

**செ**ன்னை மயிலாப்பூரைச் சேர்ந்த பாலாஜி, ''ரஜினி என்றால் நல்லெண்ணத்தின் அடையாளம்'' என்கிறார். ''அதனால்தான், அவர் பெயரைச் சொல்லி பல நல்ல காரியங்களைச் செய்து வருகிறோம். எப்பொழுதும் சக மனிதர்களை சந்தோஷப்படுத்துபவன் இறைவனுக்குச் சமம். அப்படிப் பார்க்கையில் ரஜினி, என்னைப் போல எத்தனையோ பேரைச் சந்தோஷப்படுத்துகிறார். எனவே, அவரை நல்ல மனிதர் என்று அடையாளப்படுத்தினால் மிகவும் பொருந்தும்'' என்னும் பாலாஜி, ஒரு தனியார் ஃபைனான்ஸ் கம்பெனியில் வேலை பார்த்து வருகிறார். ''என்னோட குடும்பம் இயல்பாவே சினிமா ஆர்வமுள்ளது. அதனால், எனக்குக்கூட சினிமா ஆட்கள்தான் நண்பர்களாகக் கிடைச்சிருக்காங்க. சினிமாவைப் பற்றிச் சிந்திக்காத நாட்கள் மிகக் குறைவு. என் மாமா மூலம்தான் முதன் முதலாக ரஜினியை நான் நேரில் பார்த்தேன். அந்த ஆச்சர்யம் இன்று வரை என் மனத்தை விட்டு நீங்கவில்லை. ஆனாலும், அந்த ஆச்சர்யத்துக்கெல்லாம் அப்பாற்பட்ட மனிதர் ரஜினி'' என்று சொல்லும் பாலாஜியின் தாய் மாமா, இசையமைப்பாளர் சந்திரபோஸ்.



சண்டைக் காட்சியை எடுக்கிறீர்கள் என்று பார்ப்பதற்கு ஆர்வமாக இருக்கிறேன்'' என்றார்.

**ஒ**ரு நாள் குன்றத்தூரில், இரவு நேரத்தில் சண்டைக் காட்சியைப் படமாக்கத் திட்டமிட்டிருந்தேன். அந்த ஷூட்டிங்குக்கு வரும்படி பாலசந்தரை அழைத்தேன். சரியான நேரத்துக்கு அவரும் வந்து சேர்ந்தார். அவருடைய சிஷ்யன் ரஜினியைப் பார்த்து, ''நீ சண்டை போடறதைப் பார்க்கறதுக்காகத் தான் நான் இன்றைக்கு ஷூட்டிங்குக்கு வந்திருக்கேன்'' என்று சொன்னதும், மொத்த படப்பிடிப்புக் குழுவினரும் கைதட்டி ஆரவாரம் செய்தனர்.

வில்லனுடைய ஆட்கள் கொழுந்துவிட்டு எரியும் தீப்பந்தங்களோடு வந்து ரஜினியைத் தாக்கினார்கள். தீப்பந்தங்கள் சுழல, ரஜினி அவற்றையெல்லாம் தடுக்க, சண்டை சூடு பிடித்தது.



பாலசந்தர், வெலவெலத்துப் போய் விட்டார். ''ரஜினிக்கு ஏதாவது ஆயிடப் போகுது... ரிஸ்க் எடுக்காதீங்க'' என்றார். ''ஜூடோ ரத்தினம், பலவருட அனுபவம் கொண்ட சீனியர் ஸ்டன்ட் மாஸ்டர். இந்தச் சண்டைக் காட்சியில் பங்கேற்கிற எல்லோருமே, பல வருடங்கள் சினிமா சண்டைக் காட்சிகளில் சண்டை போடும் அனுபவசாலிகள்தான்! எனவே, யாருக்கும் எதுவும் ஆகாது'' என்று அவரிடம் கூறினேன்.

''ரஜினி முகத்துக்கு அருகே தீப்பந்தம் வரும்போது ரொம்ப ரிஸ்க்! இப்படி ஓர் ஆபத்தான சண்டைக் காட்சியைப் படத்தில் எதற்காக வைக்க வேண்டும்? இந்தச் சண்டைக் காட்சியே படத்துக்கு வேண்டாம்'' என்று பாலசந்தர் சொன்னபோது, நாங்கள் மீண்டும் அதிர்ந்து போனோம். அப்புறம்?

**(பயணம் தொடரும்)**

எழுத்து வடிவம் : **எஸ். சந்திரமௌலி**

கம்பெனியில் என்கூட வேலை செய்யும் வர்ஷினி, காஃபி சாப்பிடக் கூப்பிட்டது எனக்கு ஆச்சர்யமாக இருந்தது. அதைவிட ஆச்சர்யம், அவள் என்னிடம் சொன்ன அமித் - அமிஷா பற்றிய செய்தி. இருவரும் பஞ்சாபியர்கள். அவர்கள் பலமுறை சேர்ந்து காஃபிக்கு வெளியே போவதையும், லஞ்ச்சுக்குச் சேர்ந்து வெளியே போவதையும் நான் பார்த்திருக்கிறேன். டொரோன்டோ மாதிரி நகரங்களில் இதெல்லாம் சர்வசாதாரணம்.

''அவங்க ரெண்டு பேருக்கும் நடுவில ஏதோ சரியில்லை. இன்னிக்குப் பாருங்க, ரெண்டு பேரும் சிக் லீவ் போட்டிருக்காங்க!'' என்றாள் வர்ஷினி.

''ரெண்டு பேரும் ஒரே சமயத்தில் சிக் ஆகக் கூடாதா?'' - கேட்டேன்.

''இது நாலாவது முறை.''

''அப்படியா... நான் கவனிக்கவில்லை!''

''அமிஷா, ஒரு டிவோர்ஸி; தெரியுமில்லியா?''

''தெரியும்''

''அமித்தோட மனைவி என்னோட கஸின். ரொம்ப நல்ல பெண்''

''பொதுவாக இந்த மாதிரி ஆண்களின் மனைவிகள் ரொம்ப நல்ல பெண்களாக இருப்பாங்க; கண்ணகி மாதிரி!''

''யார் கண்ணகி?''

''அதை விடுங்க! இதை என்னிடம் ஏன் பேசறீங்க?''

''நீங்க அமித்தோட நல்ல ஃப்ரண்ட்''

''இருக்கட்டும்; நான் என்ன செய்ய முடியும்?''

''அமித் குடும்பம் பாதிக்கப்படும் என்றாலும், நாகரிகம் என்ற பெயரில் பேசாமல் பார்த்துக்கொண்டு இருப்பீங்களா?'' - பேசிப்பேசியே என்னை அசைத்துவிட்டாள் வர்ஷினி.



''சரி! நான் அமித்திடம் பேசறேன்'' என்று சொன்னேன். வர்ஷினியிடம் சொல்லி விட்டேனே தவிர, அமித்திடம் எப்படிப் பேசுவது என்று தெரியவில்லை.

ச.ரெங்கநாதன்

எப்படி ஆரம்பிப்பது என்று தெரியாமல் இருக்கும்போது, ஒரு பெண் அரசியல்வாதி பற்றிய செய்தி வந்தது. அவள் ஓர் இளம் அரசியல்வாதி; டிவோர்ஸி. ஒரு பாப்புலர் பேஸ்கட் பால் ப்ளேயருடன் தொடர்பு இருப்பதாகப் பரபரப்பான செய்தி வந்தது. மதிய இடைவேளையில், இதைத்தான் முக்கிய விஷயமாகப் பேசிக்கொண்டுபோனோம்.

''இது தப்புதானே!''

''இதிலென்ன தப்பு!''

''அவன், மனைவியோட உணர்வுகளை மதிக்கவேண்டாமா?''

''முதல்ல ஒருத்தன் தன்னோட உணர்வுகளை மதிக்கவேண்டும்''

''இவனுக்கு ஏற்கெனவே கல்யாணமாகிவிட்டது''

''கல்யாணமானவன் வேறு பெண்ணைக் காதலிக்கக் கூடாதா?''

''மத்தவங்க என்ன சொல்வாங்கன்னு யோசிக்கவேண்டாமா?''

''எல்லோரைப் பற்றியும் கவலைப்பட்டால், நாம் நிம்மதியாக வாழ முடியாது''

**சி**ல நாள் கழித்து வர்ஷினி என்னிடம் வந்தாள்.

''கவனிச்சீங்களா? இன்னிக்கும் அமித்தும், அமிஷாவும் லீவ் போட்டிருக்காங்க!''

''தெரியாமத்தான் கேட்கிறேன், நீங்க அக்கவுன்ட்ஸ்ல இருக்கீங்களா இல்லை. பே ரோல் டிபார்ட்மென்ட்ல இருக் கீங்களா?''

''இது சரியில்ல. நீங்க அமித்திடம் பேசினீங்களா?''

''நேரடியா பேசலை''

''அமித் என்னதான் சொல்றான்?''

''கல்யாணத்துக்குப் பிறகு காதலிப்பது




தவறில்லைன்னு சொல்றான்''

வர்ஷினி கோபமாக ஏதோ முனகினாள்.

''அவன் பேசுவதைக் கேட்ட பிறகு, நானேகூட காதலிக்கலாம்னு நினைக்கிறேன். ஆனால், என் மனைவி அமித் மனைவி மாதிரி அப்பிராணியில்லை.''

''க்ரேட்! ஜோக்ஸ் இல்லாம ஹாஸ்பிடல் உருப்படியா ஏதாவது சொல்லுங்க.''

''நான் அவனிடம் தொடர்ந்து பேசறேன். ஆனா, அறிவுரைகளைவிட, ஏதாவது சம்பவங்கள் மனத்தில் அதிகம் மாற்றம் ஏற்படுத்தும்.''

ஓரளவு நம்பிக்கை வந்தவளாய் வர்ஷினி விலகினாள்.

**டெ**லிஃபோன் மணி அடித்தது.

''கப்பு ஸ்பீக்கிங்'' என்றேன்.

''கப்பு! நான் அமிஷா பேசறேன்'' என்ற குரலைக் கேட்டவுடன் சின்ன அதிர்ச்சி.

''சொல்லுங்க அமிஷா''

''நீங்க உடனே என் வீட்டுக்கு வரணும்''

''எதுக்கு?''

''நேரில் சொல்றேன். விஷயம் ரொம்ப சீரியஸ்''

**''உ**ள்ளே வாங்க!'' பதற்றத்துடன் கதவைத் திறந்தாள் அமிஷா.

''என்ன விஷயம்?'' என்று கேட்டுக் கொண்டே உள்ளே போனபோது, அமித்




சோபாவில் நெஞ்சைத் தடவிக் கொண்டே படுத்திருந்தான்.

''அமித் எப்படி இங்க வந்தான், அமித்துக்கு என்ன ஆச்சு, நீங்க எதுக்கு என்னைக் கூப்பிட்டீங்க?''

''இந்த மாதிரியான கேள்விகள் கேட்கக் கூடாதுன்னுதான் உங்களைக் கூப்பிட்டேன். நல்லாத்தான் பேசிக்கிட்டிருந்தார். திடீர்னு இலேசா நெஞ்சு வலி என்றார். அமித் வீட்டில் யாரைக் கூப்பிட்டாலும், ஆம்புலன்ஸ் கூப்பிட்டாலும், அமித் இங்க இருப்பதற்கு விளக்கம் சொல்லணும். நீங்கன்னா புரிஞ்சுப்பீங்க''- சொல்லும்போதே அவள் குரல் உடைந்துவிட்டது.

''அவரே தனியாக ஹாஸ்பிட்டல் போறேன்னார். எனக்குப் பயமாயிருந்தது. நீங்க துணைக்குப் போனால் நல்லாயிருக்கும்.''

**ஹா**ஸ்பிட்டல்.

அமித்துக்குச் சிகிச்சை ஆரம்பித்தார்கள்.

''நானும் அமித்தும் ரெஸ்டாரன்ட் போனோம். உடம்பு சரியில்லைன்னு சொன்னான். உடனே மிஸ்ஸி வாகா ஹாஸ்பிடல் கொண்டு வந்திருக்கிறேன். நீங்க உடனே கிளம்பி வாங்க!'' என்று அமித்தின் மனைவிக்குத் தகவல் சொன்னேன். அவள் பத்தே நிமிடத்தில் அழுதுகொண்டே ஓடி வந்தாள்.

''என்னாச்சு?''

''பயப்பட எதுவும் இல்லை. ஆனால், கொலஸ்ட்ரால் ரொம்ப அதிகமாக இருக்குது. பி.பி. ரொம்பவே அதிகம். ஆபிஸில் ஸ்ட்ரெஸ் எதுவும் இருந்ததா? அல்லது குடும்பத்தில்?'' என்று டாக்டர் கேட்டார்.

''வீட்டில் எதுவும் இல்லை'' என்று அமித் மனைவி சொன்னாள். நான் எதுவும் சொல்லவில்லை.

''இனி டயட் கன்ட்ரோல் தேவை'' என்றார் டாக்டர்.

அமித்தைப் பார்த்தவுடன் அவன் மனைவி உடைந்து அழ ஆரம்பித்தாள். அமித், அடிக்கடி குறிப்பிடும் காதல் உணர்வு, அவன் மனைவி அழுவதில்தான் இருப்பதாக எனக்குத் தோன்றியது. 'காதல், காதல்' என்று ஏதோ பேசிக்கொண்டலைந்தாயே. 'இது தான்டா காதல்'னு சொல்லலாம் என்று நினைத்தேன்.

**சி**ல நாட்களில், அமித் போக்கில் ரொம்ப மாற்றம் தெரிந்தது.

''கவனிச்சீங்களா! ரெண்டு பேரும் ஒண்ணா வெளியே போவதில்லை. ரெண்டு பேரும் ஒன்றாக சிக் லீவ் எடுப்பதில்லை! உங்க அறிவுரை நன்றாக வேலை செய்கிறது'' என்றாள் வர்ஷினி.

''அறிவுரைகள் யாரையும் மாற்றுவதில்லை; சம்பவங்கள்தான் மாற்றுகின்றன'' என்றேன். வர்ஷினி என்னைப் புரியாமல் பார்த்தாள். ●

நடிக்க வந்து மூன்று ஆண்டுகள் ஆகிவிட்டன. ஆனால், இன்றைக்கும் சந்தியா என்றால், 'காதல், காதல்' சந்தியா என்கிற நிலைமைதான் நீடிக்கிறது. நல்ல வாய்ப்பாகக் கருதப்பட்ட செல்வராகவன் படவாய்ப்பும், சந்தியா கையைவிட்டுப் போயிருக்கிறது. விஜய், அஜீத், சூர்யா போன்ற பெரிய ஹீரோக்களின் படம் இன்றைக்கும் சந்தியாவுக்கு எட்டாக்கனியாக இருக்கிறது. போதாதென்று பரத், ப்ரித்விராஜ் இருவருடனும் இணைத்து வெளிவரும் கிசுகிசுக்கள். அத்தனைக்கும் பதில் சொன்னார் சந்தியா.

"சினிமாலதான் நான் வாழணும்னு ஒருபோதும் நினைக்கலை. ஆரம்பத்துல என் கனவு ஒரு பெரிய ஃபேஷன் டிசைனராக ஆகணும் என்பதாகத்தான் இருந்தது. ஆனால், திடீர்னு வந்த என் 'காதல்' பட வாய்ப்பு என் வாழ்க்கையையே மாத்திடுச்சு.

ஆரம்பத்துல நாம எந்த மாதிரியான படத்துல நடிக்கிறோம்னு எனக்குத் தெரியலை. படம் வெளிவந்தபிறகு நான் புதுவாழ்க்கை வாழ ஆரம்பிச்சுட்டேன். பாலசந்தரிலிருந்து அந்தப் படத்துக்காக என்னைப் பாராட்டாதவங்களே கிடையாது. அப்புறம் வந்த 'டிஷ்யூம்' எனக்கு நல்ல பேரைக் கொடுத்துச்சு. படமும் நல்லாப் போச்சு.

இன்னைக்கும் என்கிட்ட பேசறவங்க 'காதல்' பத்திப் பேசாம இருக்கறதில்லை. அதுக்காக எல்லாப் படங்களும் அதேமாதிரி அமையணும்னு எப்படி எதிர்பார்க்க முடியும்? அது தவறில்லையா! என் கேரக்டர் நல்லா இருந்து, நல்ல படக் கம்பெனியும் அமைஞ்சா, நான் உடனே அந்தப் படத்துல நடிக்கத் தயாராயிடுவேன். வெற்றி - தோல்வி எல்லாம் நம்ம கையிலயா இருக்கு? நிச்சயம் நல்ல படங்கள் தரணும்னு எனக்கு ஆசையாதான் இருக்கு. 'தூண்டில்', 'கண்ணாமூச்சி ஏனடா' படங்கள் எல்லாம் எனக்கு நல்ல பேரை வாங்கித் தந்திருக்கின்றன. இதனால எனக்கு இழப்புகள்னு எதுவும் கிடையாது. ஹீரோக்களுடனான கிசுகிசுக்கள்ல மாட்டாத நடிகை யாரு? இது எனக்குப் புதுசில்லை. நடிக்க வந்ததிலிருந்தே, என்னைப் பத்தி இதுமாதிரி செய்திகள் வந்துட்டுத்தான் இருக்கு.

செல்வராகவன் படம்னு கேள்விப்பட்டதும் உடனே நான் நடிக்க ஒப்புக்கிட்டேன். அது இப்போ ட்ராப் ஆயிருக்கு. சினிமாவுல இந்த அனுபவம் எல்லோருக்கும் ஏற்பட்டிருக்கும். அதனால, போனதைப் பத்திப் பெருசா நான் கவலைப்படலை. பெரிய ஹீரோக்கள் படத்துல நான் ஏன் இன்னும் நடிக்கலைனு எனக்குத் தெரியலை. பதினஞ்சு வயசுல சினிமாவுக்கு வந்தேன். அதனால தமிழ்சினிமா இன்னும் என்னைச் சின்னப் பொண்ணாவே பாக்குதுபோல. சமீபத்துல என் நடிப்பு சம்பந்தமா எனக்கு ஒரு பாராட்டுக் கிடைச்சது. கமல் என்னைப் பத்தி, 'ஸ்ரீதேவிக்குப் பிறகு அருமையா நடிக்கக்கூடியவங்க'ன்னு பாராட்டிப் பேசியிருக்கார். இது எனக்குப் பெரிய டானிக்!"

- செந்தில்



# "இன்னொரு ஸ்ரீதேவி!"

கமல் பாராட்டு!

# புள்ளிகள்... கோலங்கள்... 11

ஒரு பக்கத் தொடர்

படுதலம் சுகுமாரன்

பொன்ராஜுக்குத் தூக்கிவாரிப் போட்டது. குளிரிலும் வியர்த்தது.

"என்ன உளர்றே...?" என்றார்.

"உளறலை சார். உண்மையைச் சொன்னேன். இப்பல்லாம் பணக்கார வீட்டுப் பசங்க, பொண்ணுங்க பார்ட்டி, டிஸ்கோன்னு போறது சகஜம்தானே."

"என் மகள் டிஸ்கோ ஆடினாளா?"

"குடிச்சா ஆடத்தானே வேணும்..."

"நீ ஃபோட்டோ எடுத்தியா?"

"அதுக்காகத்தானே போனேன். ஆனால், சுலபமான வேலை இல்லை சார். உள்ளே எனக்குத் தெரிஞ்ச நபர் இருக்கப்போய், சாத்தியமாச்சு."

"பேசாதே... எடு அந்த ஃபோட்டோவை..."

"அதை நெகடிவோடு சேர்த்து நல்ல விலை கொடுத்து, உங்க குடும்பத்து ஆளே வாங்கிக்கிட்டாங்க சார்."

"நான்சென்ஸ். உன்னைச் சுட்டுப் பொசுக்கிடுவேன்."

"சுட வேண்டியது என்னை இல்லை.... இந்தக் காரியத்தைச் செய்யச் சொன்னாங்களே... அவங்களை. விரோதிகளை விட்டுவச்சுக்கிட்டு எம்மேல பாயறீங்களே. இதனால், எனக்குப் பிரச்னை வரும்னு தெரிஞ்சும் ஏன் கூப்பிட்டுச் சொல்றேன்னு யோசிக்கப் பாருங்க..."

பொன்ராஜ், சிரமப்பட்டுத் தன்னைக் கட்டுப்படுத்திக்கொண்டார்.

"ஆல் ரைட். சொல்லிட்டேல்ல, நீ போ..."

"நான் சொன்னதுக்கு ஆதாரமா ஃபோட்டோ பார்க்க வேணாமா?"

"அதைத்தான் நெகடிவோடு கொடுத்துட்டேன்னியே..."

"ஒரே ஒரு காப்பி மட்டும் மறைச்சு வச்சிக்கிட்டேன். தொழில் ரகசியம்"



என்றபடி, தன் தோள் பையின் ஜிப்பை விடுவித்து, 'கோனிக்கா' கவர் ஒன்றை எடுத்தான்.

"பெத்த மகளை அந்த நிலையில் பார்க்க ரொம்ப சங்கடமாத்தான் இருக்கும். சேர்ந்து ஆடிக்கிட்டிருக்கிற ஆளைப் பார்த்திங்கன்னா அதிர்ச்சியாயிருக்கும்..." என்று அவன் சொல்லிக் கொண்டிருந்த போது, போலீஸ் ஜீப்பின் சர்ச் லைட் வெளிச்சம், குபீரென்று வெள்ளம் போல் அவன்மீது பாய்ந்தது.

திடுக்கிட்டுப் போன அவன், பொன்ராஜை முறைத்தான்.

(தொடரும்)



# தோட்டா!

**போ**லீஸ் - ரௌடி கதை. ஆனால், போலீஸே, ரௌடியை உருவாக்குவதுதான் வித்தியாசம். அனாதையாக்கப்பட்ட ஜீவனை, போலீஸ் அதிகாரி முத்துவேல் 'தோட்டா' என்கிற பெயரோடு ரௌடியாக வளர்ப்பதும், அவரின் தீயநோக்கத்தைப் புரிந்துகொண்டு ப்ரியாமணிக்காக அவரை ஜீவன் எதிர்ப்பதும் தான் கதை.

* ஜீவனுக்கு நூற்றுக்கு நூறு பொருந்துகிற கதாபாத்திரம். ஒவ்வொரு காட்சியிலும் கதாபாத்திரத்தின் தன்மை உணர்ந்து நடித்திருக்கிறார். ப்ரியாமணி, "நீங்க என்ன செய்யறீங்க?" என்று கேட்கும்போது, "எக்ஸ்போர்ட்... பார்சல் பண்ணி மேலே அனுப்பற வேலை" என்று சொல்லும் காட்சியில் தியேட்டர் அதிர்கிறது.

* ப்ரியாமணி - அநியாயத்துக்கு ஃப்ரியா - மணி! கண்களில் துறுதுறு. வசனத்தில் மொரமொரவென முறைத்துக்கொண்டு நிற்கிறது குரல். ஜீவன் ரௌடி என்று தெரியவரும் காட்சிகளில், ப்ரியாமணியின் உணர்ச்சிப் போராட்டம் காதல் ரசம்.

அடிதடி ஆக்ஷன் படம்தான் என்றாலும், இரத்த வாடை வீசாத, புத்தி சாலித்தனம் மிளிர்கிறது.

* படத்தின் பலமே க்ளைமாக்ஸ்தான். 'போலீஸ் கையால் சாவதைவிட, காதலி உன் கையால் சாவதே பாக்கியம்' என்று ப்ரியாமணியிடம் ஜீவன் கெஞ்சுவதும், ப்ரியாமணி நடுங்குவதும் திக்திக்.

கதையின் சம்பவங்களும், காட்சியமைப்பும் புதுசு என்பதால் திரைக்கதையில் விறுவிறு வேகம் தெரிகிறது. வசனங்கள் பளிச் பளிச்.

* பாலமுருகன் ஒளிப்பதிவு தாதா உலகத்தைக் காட்டி ரசிக்க வைக்கிறது. ஆக்ஷனில் அசத்தியிருக்கிறார் தளபதி தினேஷ்.

* ஸ்ரீகாந்த் தேவா இசை. ஏதாவது புதுசா பண்ணுங்க சார். அப்பத்தான் நிலைச்சு நிக்க முடியும்.

* டைரக்ஷன் செல்வா. தாதா உலகத்தை, காதல் குழைத்துக் கொடுத்திருக்கிறார். இவரின் 'தோட்டா' வைச்ச குறி தப்பவில்லை.

- கபிலன்

என் நெருங்கிய உறவினர் ஒருவர் இல்லத்தில், வீட்டுவேலை செய்யும் பெண்மணிக்கு உடல் நலக்குறைவு ஏற்பட்டது. ஆஸ்பத்திரிக்குப் போயிருக்கிறாள். அது ஏழைகளுக்கு உதவுவதாகக் கூறிக்கொள்ளும் மருத்துவமனைதான். ஆயினும் என்ன, 'எம்.ஆர்.ஐ. ஸ்கேன்' எடுக்க வேண்டும் என்று கூறிவிட்டார் டாக்டர்! பயந்துபோய், வட்டிக்குக் கடன் வாங்கி அந்தச் சோதனையும் முடிந்தது. 'ஆயிரம் ரூபாய்க்கு ஒரு ஊசி இருக்கு; நாலு ஊசி போட்டுக்கொள்; உடம்பு சரியாகிவிடும்' என்று சொல்லியிருக்கிறார் டாக்டர்! இது போன்ற பல செய்திகள் காதில் விழுகின்றன. 'எய்ட்ஸ்' இல்லாத ஒருவருக்கு, அந்த நோய் இருப்பதாகக் கூறப் போக, அவர் வாழ்க்கையே பாழாகிவிட்டதாக ஒரு தகவல்.

• நவாப் ராஜமாணிக்கம் பிள்ளையின் நகைச்சுவையைப் பெரிதும் ரசித்த கல்கி அவரது நாடகத்துக்குத் தலைமை...

# நகைச்சுவை மாநாடுகள்!

இத்தகைய சம்பவங்கள் ஒரு புறம் வருத்தமளிக்கிறபோதிலும், கூடவே அமரர் 'கல்கி' அவர்களுக்கு ரொம்பப் பிடித்தமான ஒரு ஜோக் நினைவு வந்து மனசுக்குள் சிரிக்க வைக்கும். அந்த ஜோக் :

'ஒரு நாள் மழையில் நனைந்துவிடவே ஜலதோஷம் பிடித்துக்கொண்டது.'

'மஃப்ளரை எடுத்து சுற்றிக்கொண்டு டாக்டரிடம் போனேன்; ஏனென்றால் டாக்டர் பிழைக்க வேண்டுமில்லையா?'

'டாக்டர் மருந்துச் சீட்டு எழுதிக் கொடுத்தார்; ஏனென்றால் மருந்து தயாரிப்பாளர்கள் பிழைக்க வேண்டுமில்லையா?'

'மருந்துச் சீட்டை எடுத்துக்கொண்டு மருந்துக் கடைக்குப் போனேன்; ஏனென்றால், மருந்துக் கடைக்காரர் பிழைக்க வேண்டுமில்லையா?'

'மருந்தை வாங்கிக்கொண்டு வீட்டுக்கு வந்து, அதை சாக்கடையில் கொட்டினேன்; ஏனென்றால், நான் பிழைக்க வேண்டுமில்லையா!'






# 20

# கல்கி ராஜேந்திரன்



■ என்ன நகைச்சுவையாக இருக்கும்...?

இந்த ஜோக்கை முதன்முதலில் நான் எழுதிப் படித்துக் காட்டியபோது, அப்பா வீடு அதிரச் சிரித்தது எனக்கு இன்னமும் நன்றாக நினைவிருக்கிறது. மறுநாள் கல்கி காரியாலயம் சென்றதும், 'சாமா'வை அழைத்து முழுப்பக்க அளவில் ஐந்தாறு கார்ட்டூன் சித்திரங்கள் வரையச் செய்து, தமது பத்திரிகையில் ஜோக்கைப் பிரசுரித்தார். அது மட்டுமல்ல, அவர் பேசுகிற பல பொதுக்கூட்டங்களில், இந்த ஜோக்கைத் தமக்கே உரிய பாணியில் கூறி அவையோரைச் சிரிப்பில் ஆழ்த்தினார்.

இந்த நகைச்சுவைத் துணுக்கை அப்பாவுக்கு நான் சொன்னதற்கும், அது அவருக்கு ரொம்பவும் பிடித்துப்போனதற்கும் காரணங்கள் உண்டு. நகைச்சுவை இழையோட எழுதிய 'கல்கி' நயமான நகைச்சுவையை ரசிப்பதிலும் அளவிடமுடியாத ஆர்வம் காட்டியவர். எனது சகோதரி ஆனந்தியும் நானும் தினந்தோறும் மாலையோ - இரவோ அவர் வீடு திரும்பிய பிறகு, ஆளுக்கு ஒரு ஜோக் எழுதி வைத்துக் கொண்டு சொல்ல வேண்டும் என்று உத்தரவு போட்டிருந்தார். கையெழுத்து மணி மணியாக இருக்க வேண்டும் என்று எதிர் பார்ப்பார். எழுத்துப் பிழை, இலக்கணப் பிழை, இருந்தால் திருத்துவார். இதன் மூலம் சிரிப்புக்குச் சிரிப்பும் ஆச்சு; எழுத்துப் பயிற்சியும் கிடைத்தது.

எழுதிப் படிக்கிற ஜோக்குகள் சொந்தச் சரக்கும் அல்ல. ஏதோ ஓர் ஆங்கிலப் பத்திரிகையில் படித்த ஜோக்கைத்தான், தமிழாக்கம் செய்து அப்பாவிடம் அன்று படித்துக் காட்டினேன். அது அவருக்கு ரொம்பப் பிடித்துப் போனதற்கு மனோதத்துவ ரீதியில் ஒரு காரணம் இருந்தது. மருந்துகள் நோயைக் குணப்படுத்துகின்றனவோ இல்லையோ, பக்க விளைவுகளை நிச்சயம் ஏற்படுத்தும்.

இதை 'கல்கி' அவர்களைவிட நன்றாக உணர்ந்தவர் ஒருவர் இருக்கமுடியாது. வாழ்நாளெல்லாம் ஆஸ்த்து



மாவுடன் போராடியபடியேதான் இமாலயச் சாதனைகள் நிகழ்த்தினார் அவர். ஆஸ்த்துமாவைக் கட்டுக்குள் வைத்து காரியங்களில் ஈடுபடுவதற்காக, 'பச்சை மருந்து', 'சிவப்பு மருந்து' என்று செல்லப் பெயரிட்டுப் பலவற்றை விழுங்கினார். அந்த நாளில் இப்போதுள்ளதுபோல் ஆஸ்த்துமாவுக்கு உயர்தரமான மருந்துகள் இல்லை. 'அட்ரினலின்' ஊசி போட்டுக்கொண்டு பொதுக்கூட்டங்களில் பேசச் செல்வார். மிகக் குறைந்த வயதிலேயே (55) அவர் இறந்து போனதற்கு, அவர் விழுங்கிய மருந்துகள் உருவாக்கிய பக்க விளைவுகள் ஒரு முக்கிய காரணம்.

**மே**ற்படி முழுப்பக்க ஜோக் போலவே நான் கூறக்கேட்டு அவர் மகிழ்ந்த ஓர் அபத்தக் கவிதையும் உண்டு. ஆங்கிலத்தில் non-sensical verse என்பார்களே, அந்த ரகம். இதுவும் என் சொந்தக் கற்பனை அல்ல. சதாசிவம், சிறுவனாகிய என்னை மகிழ்விக்கக் கூற, நான் விழுந்து விழுந்து சிரித்தது போதாதென்று, அப்பா எப்போது வீட்டுக்கு வருவார் என்று காத்திருந்து அவருக்குக் கூறிய கவிதை :

***யானை என்பது காகம் போன்ற ஒரு***
***வெண்மையான பட்சி,***
***அது ஆகாயத்தில் ஆனந்தமாய்ப்***
***பறக்கும்,***
***குழந்தைகள் அதைப் பிடித்துக்***
***கொண்டு வந்து,***
***கூண்டில் அடைத்துக்***
***குஷியாக***
***விளையாடுவார்கள்!***

- இதைக் கூறிவிட்டு நான் சிரிக்க, அப்பா சேர்ந்து சிரிக்க, மறுநாள் சாமாவுக்கு நிறைய வேலை இருந்தது. பாப்பா மலர் பகுதிக்காக முழுப் பக்க அளவில் பறக்கும் யானையையும், சிறுவர்களால் கூண்டுக்குள் தள்ளி அடைக்கப்படும் யானையையும் சித்திரித்தது போதாதென்று, என்னையும் டர்பன், மூக்குக்கண்ணாடி சகிதம் முக்காலியில் அமர்ந்த நிலையில் படம் போட்ட சாமா, 'ஆசிரியர் தம்பி எழுதுகிறார்' என்று மகுடமும் சூட்டி விட்டார்! சதாசிவம் என்ன சொல்வாரோ என்ற என் கவலை, 'என்ன தம்பி! ஜமாய்ச்சுட்டியே!' என்று அவர் கூறித் தட்டிக்கொடுக்கவும் பெருமிதமாக மாறிவிட்டது!



• நாடோடி

**வீ**ட்டில் மட்டுமின்றி காரியாலயத்திலும் நகைச்சுவை மாநாடுகள் நடத்துவார் 'கல்கி'. நாடோடி, சுபாவமாகவே எப்போதும் சிரித்தபடியே பேசுவார். 'ஜோக்கைச் சொல்லிவிட்டுச் சிரி; அல்லது சிரித்துவிட்டுச் சொல்லு' என்பார் 'கல்கி'. ''நீங்கள் சிரிக்காமலிருந்து விடப் போகிறீர்களே என்பதற்காகத்தான்...' என்று கூறும்போதே சிரிப்பார் நாடோடி. இதற்கு நேர்மாறானவர் டீ.வி.சபரிராஜன். அவர் உலக நடப்புகளை நன்கறிந்து சாதுரியமாக உதிர்க்கக்கூடியவர். ஆயினும், உடல் நலம் குன்றியிருந்தால் சதா சோகமாகக் காணப்படுவார். ''எப்பா! ஜோக் சொல்லும்போதுகூட இத்தனை சோகமா முகத்தை வைச்சுக்கணுமா? எங்களுக்கு எப்படிச் சிரிக்கத் தோணும்? சரி, சரி! சொல்லி அழு!'' என்பார் 'கல்கி'. உடனே சபரிராஜன், ''கதாநாயகி சோகச் சிரிப்பு சிரித்தாள்!' என்று வர்ணிக்கிறீர்களே, அப்படிச் சிரியுங்களேன்'' என்பார். கல்கி, சந்தோஷமாகவே சிரித்துவிட்டு, ''என்ன வேடிக்கை! என்ன



ஆச்சு உனக்கு? ஜோக் சொல்லு!'' என்று உத்தரவிடுவார். ''முதலில் SKC வந்தால் ஜோக் பின்னாடியே வரும்'' என்பார் லோமாஸ். ''காஷ்மீர் ஸ்வீட், காரம், காப்பி வேண்டாம்; ஓட்டலுக்குப் போகலாம்'' என்பார் விந்தன். ''அங்கிருந்து அப்படியே சினிமாவுக்குப் போகலாம்'' என்பார் பகீரதன். இப்படியாக ஜோக் கான்ஃபரன்ஸ், லாரல் - ஹார்டி நடித்த காமெடி சினிமா பார்ப்பதில் போய் முடியும்!

'கல்கி', உதவி ஆசிரியர்களிடம் உற்ற நண்பர்போல் பழகினாலும், காக்காய் பிடிக்க நினைப்பவர்களுக்கு இடம் தராமல் சமயம் நேரும்போது மட்டம் தட்டிவிடுவார். ஓர் உதவி ஆசிரியர் 'கல்கி'யை மகிழ்விக்கக் கருதி, 'சார், இன்னிக்குக் காலையில் பஸ்ஸில் வரும்போது உங்க தலையங்கம் பற்றித்தான் பேச்சு. 'ராஜாஜி சார்பில் சரியான பதிலடி'ன்னு கல்கியைக் கையில் வைச்சுண்டு பாராட்டிப் பேசிண்டிருந்தார் ஒருத்தர்' என்று சொன்னார். கல்கி அவரை ஏற - இறங்கப் பார்த்துவிட்டு, 'அடடா! உனக்குத் தெரியாதா? நீ வீட்டுக்குப் போன பிறகு அந்தத் தலையங்கத்தை மாற்றி விட்டேன். அதைவிட முக்கியமான நியூஸ் மாலை ஏழு மணி சுமாருக்குக் கிடைச்சுது. அதனால வேற எழுதிக் கொடுத்துட்டேன்' என்றார் அமைதியாக. உதவி ஆசிரியர் முகத்தில் ஈயாடவில்லை.

**நாடோடியிடம், "ஜோக்கைச் சொல்லிவிட்டுச் சிரி; அல்லது சிரித்துவிட்டுச் சொல்" என்பார் கல்கி!**

வேலை வாங்குவதிலும் 'கல்கி', 'கல்கி'தான். ஓர் உதவி ஆசிரியர் மாலை ஐந்து மணி ஆனதும், அங்கவஸ்திரத்தை உதறி தோள் மேல் போட்டுக்கொண்டு, ஆசிரியர் உத்தரவு தர வேண்டும் என்பதற்காக அவர் மேஜை முன் வந்து நின்றார். 'கல்கி' தலை நிமிராமல் எழுதிக் கொண்டிருந்தார். உதவி ஆசிரியர் மெல்லக் கனைத்துக்கொண்டு, 'நான் கிளம்பறேன்' என்றார். கல்கி கட்டெறிப்பதுபோல் அவரை நிமிர்ந்து நோக்கி, 'போயிட்டு வாயேன்பா! பேஷாப் போயிட்டு வா! கோபுரத்தை என்ன பொம்மையா தாங்கறது? பேஷாப் போயிட்டு வா' என்றார்.

சதாசிவம், 'கல்கி' இருவருக்குமே 'வீட்டுக்குக் கிளம்புகிறேன்', 'போயிட்டு வர்றேன்' என்று யார் சொன்னாலும் பிடிக்காது! இருபத்தி நாலு மணி நேரமும் கல்கி பத்திரிகைக்காகவே சிந்திக்க வேண்டும்; உழைக்க வேண்டும் என்று கருதினார்கள். அந்தகைய விசுவாசத்தை பத்திரிகைக்காகவும் நிறுவனத்துக்காகவும் எதிர்பார்த்தார்கள்.

**1957**ல் நான் கல்கி காரியாலயத்தில் வேலைக்குச் சேர்ந்த புதிதில், மோட்டார் சைக்கிளில் வந்து போய்க் கொண்டிருந்தேன். ஒருநாள் மாலை, பைக் அருகே நின்று உதைக்கத் தொடங்கியபோது சதாசிவம் வாசலுக்கு வந்தார்.

''என்ன, புறப்பட்டாச்சா?'' என்றார்.

''ஆமாம், இருட்டுவதற்கு முன் வீடு போய்ச் சேருகிறேன்'' என்றேன்.

''ஏன், உன் மோட்டார் சைக்கிள் இரவு நேரத்தில் ஓடாதா?'' என்று கேட்டார் சதாசிவம்.

பத்திரிகைத் துறையில் அவர் எனக்குக் கற்றுத் தந்த முதல் பாடம் அது!

(பேசுவோம்)



# நச்சுன்னு 4 கேள்வி

**நா**க்கைப் பிடுங்கற மாதிரி, நாலு கேள்வி கேட்டுட்டு வர்றேன்னு சீறிப் பாய்றவங்க நிறைய பேரு இருக்கறாங்க. ஆனா, நம்ம தஞ்சாவூர் குந்தவை நாச்சியார் மகளிர் கல்லூரி பொண்ணுங்க அப்படியெல்லாம் கிடையாதுங்க. அவங்களோட ஃபேவரிட் ஸ்டார்ங்கிட்ட சும்மா 'நச்'சுன்னு நாலு கேள்வி கேட்கப் போறாங்க. பதில் கிடைக்குமான்னு தெரியல. ஆனா, கேட்கறதுல என்ன தப்புன்னு கேட்கறாங்க... நியாயமான கேள்விதானே?

# ஆஹா.. கிளம்பிட்டாங்கய்யா

**ப்ரியதர்ஷினி** : சூர்யா... நீங்க அழகா இருக்கீங்க; அழகா நடிக்கிறீங்க, அதனாலதான் உங்கள எனக்கு ரொம்பப் பிடிக்கும்.

1. சிம்ரன்தான் பிடிக்கும்னு ஒரு முறை சொன்னீங்க. அப்புறம் ஏன் 'ஜோதிகா'வைக் கல்யாணம் பண்ணிக்கிட்டீங்க?

2. 'ஜில்லுன்னு ஒரு காதல்'ல பூமிகா மாதிரி, 'ஜோதிகா'வுக்கு முன்னாடி ஏதாச்சும்...

3. சும்மா... சிரிக்கக் கூடாது. ம்! சொல்லுங்க.. திடீர்னு நீங்க தமிழக முதலமைச்சரா ஆயிட்டா என்ன பண்ணுவீங்க?

4. லாஸ்ட் கொஸ்டின்! டைரக்டர் அமீரை ஹீரோவா வைச்சு சொந்தப் படம் எடுப்பீங்களா?



• குமரன்

''பட்ஜெட் போடும் போது மளிகை செலவை விட மருந்துக்கு அதிகம் செல விடற குடும்பங்கள் தான் நாளுக்குநாள் அதிக மாயிட்டு வருது.

'உணவே மருந்து! மருந்தே உணவு' என்று இயற்கையோடு இணைந்த வாழ்க்கையை வாழ மறந்ததால்தான் புதுப்புது வியாதிகள் மனுஷனை ஆட்டிப் படைக்குது!'' என்று ஆதங்கப்படுகிறார் குமரன்.

''ஃபாஸ்ட் ஃபுட் கலாசாரத்திலே மூழ்கிப்போய், உடம்பைக் கெடுத்துக்கிற இன்றைய தலைமுறை, ரொம்பச் சீக்கிரம் நம் முன்னோர் காட்டிய இயற்கை உணவு முறைக்குத் திரும்பிடுவாங்கங்கிற நம்பிக்கை எனக்கு இருக்கு!'' என்று கூறும் குமரன், தன் தந்தையின் அடியொற்றி, 'அருகம்புல் காயகற்ப சாறு' மூலம், மக்களின் ஆரோக்கியமான வாழ்வுக்குச் சேவை செய்து வருகிறார்.

''ஒரு பிடி சாணியைப் பிடிச்சு அதிலே அருகம் புல்லைச் செருகி வெச்சு, அதை பிள்ளையார்னு வழிபடக் காரணமே சாம்பலாகப் போற நம்ம உடம்புக்கு அருகம்புல்தான் அற்புத மருந்துன்னு அறிவுறுத்தத்தான்.

அருகம்புல், வேப்பிலை, கருவேப்பிலை, புதினா, நெல்லி, கடுக்காய், இஞ்சி, பூண்டு போன்ற சில மருந்துவப் பொருட்கள் சரியான விகிதத்திலே கலந்த கலவைதான் அருகம்புல் காயகற்ப சாறு'' என்று சொல்பவரிடம்,

''அருகம்புல் என்ன அவ்வளவு மகத்துவம் மிக்கதா?'' என்றால், ''நாய், பூனை மாதிரி ஜீவராசிகள்கூட, உடம்புக்கு ஏதாவது வந்துட்டா வயித்தைக் காயப் போட்டுட்டு, அருகம்புல்லைத் தேடிப் போய் கடிச்சு மெல்லும்! கிராமப்புறங்களில உள்ளவங்களுக்கு இந்த உண்மை புரியும்! நகர்ப்புறத்திலே உள்ள நாய், பூனை

# ஆல் இன் ஆல்



களுக்கு இது தெரியுமான்னு எனக்குத் தெரியலே!'' என சிரித்தவர் மேலும் தொடர்ந்தார்.

''நம் சித்தர்கள் ஆயிரம் வருஷத்துக்கு முந்தியே வேம்பு, அருகம்புல் போன்ற பல மூலிகைகளைப் பத்தி விவரமா சொல்லியிருக்காங்க. இன்னைக்கும், மஞ்சள்காமாலை நோய்க்கு, கீழாநெல்லி தானே அருமருந்தா இருக்கு.

மக்களை அதிகமா பயமுறுத்துகிற மாரடைப்பு, இரத்தக் கொதிப்பு, ஆஸ்துமா, சர்க்கரை வியாதி, மூட்டுவலி, சிறுநீர்க் கோளாறு, ஆண்மைக் குறைவு, இளநரை, போன்ற நோய்களைக் கட்டுப்படுத்தும் பேராற்றல் அருகம்புல்லுக்கு உண்டு! இது அனுபவபூர்வமா நிரூபிக்கப்பட்டிருக்கு!

பெண்களின் மாதவிடாய்க் கோளாறுகள், முடி உதிர்தல், தாய்மார்களுக்குப் பால் சுரப்பை அதிகப்படுத்துவது என... அருகம்புல்லுக்கு, அறுபதுக்கும் மேற்பட்ட நோய்களைக் குணப்படுத்தும் ஆற்றல்கள் உண்டு. 'ஆகாததும் அருகம்புல்லால் ஆகும்'ன்னு சித்தர்கள் பாடல்கூடச் சொல்லுதே!'' என்கிறார்.

''அருகம்புல் சாறு சாப்பிடும்போது, பத்தியம் ஏதும் இருக்கணுமா?'' என்றால், ''ஒரு பத்தியமும்' கிடையாது. காலை எழுந்ததும் வெறும் வயிற்றில் அரை தம்ளர் அளவுக்கு குழந்தைகள், பெரியவர்கள் என யாரும் சாப்பிடலாம். இதைக் குடித்த இரண்டு மூன்று நாட்களிலேயே அசதி, தூக்கமின்மை, பசியின்மை, கைகால் வலி, பித்தம், வாயு, ஒவ்வாமை போன்றவைகளுக்கு நல்லது'' என்று சொல்லும் குமரனின் அப்பா, தாமோதர யாதவ், அருகம்புல் காயகற்பத்தை இலவசமாக மக்களுக்கு வழங்கி வந்திருக்கிறார்.

**- எம்.ஆர்.இராஜேந்திரன்**



# அருகம்புல்!

**பெண்களுக்குப் பால் சுரப்பை அதிகப்படுத்துவது போன்ற அறுபதுக்கும் மேற்பட்ட நலன்களை அளிக்கும் ஆற்றல் உண்டு!**

# பார்த்திபன் கனவு

## 26. படகு நகர்ந்தது!

பொன்னன், கோலை வாங்கிப் போட்டு இரண்டே எட்டில் படகை விக்கிரமன் நின்ற இடத்துக்குச் சமீபமாகக் கொண்டு வந்தான். படகு கரையோரமாக வந்து நின்றதும் கரையில் குதித்தான். விக்கிரமன் தாவி ஆர்வத்துடன் பொன்னனைக் கட்டிக்கொண்டான். "மகாராஜா! மறுபடியும் தங்களை இவ்விதம் பார்ப்பதற்கு எனக்குக் கொடுத்து வைத்திருந்ததே!" என்று சொல்லி, பொன்னன் ஆனந்தக் கண்ணீர் வடித்தான்.

விக்கிரமன், "பொன்னா! சமய சஞ்சீவி என்றால் நீதான். இங்கு நின்றபடியே உன்னுடைய குடிசையைத்தான் பார்த்துக் கொண்டிருக்கிறேன். இரண்டு மூன்று நாளாகவே பார்த்துக்கொண்டிருக்கிறேன். இன்றைக்கு உன் படகைப் பார்த்திராவிட்டால், நீந்தி அக்கரைக்கு வருவதற்கு முயன்றிருப்பேன். அதோ பார், பொன்னா! படகு நகர்கிறது. முதலில் அதைக் கட்டு" என்றான். பொன்னன் ஓடிப் போய்ப் படகைப் பிடித்திழுத்துக் கரையோரமிருந்த ஒரு மரத்தின் வேரில், அதைக் கயிற்றினால் கட்டிவிட்டு வந்தான். இருவரும் ஜலக் கரையில் மரத்தடியில் உட்கார்ந்தார்கள்.

"பொன்னா! அப்புறம் என்ன செய்தி சொல்லு! அந்தக் காட்டாற்றங்கரையில் நடந்ததெல்லாம் எனக்குச் சொப்பனம் போல் தோன்றுகிறது. இன்னுங்கூட நான் கனவு காண்கிறேனோ அல்லது உண்மையாகவே நமது அருமைக் காவேரி நதிக் கரையில் இருக்கிறேனா என்று சந்தேகமாயிருக்கிறது. நீ எப்போது என்னைப் பிரிந்து சென்றாய்? ஏன் பிரிந்து போனாய்?" என்று விக்கிரமன் கேட்டான்.

"ஐயோ, மகாராஜா; நான் எவ்வளவோ பிரயத்தனம் செய்து, வைத்தியனை அழைத்துக்கொண்டு வந்து பார்க்கும்போது, உங்களைக் காணவில்லை. அப்போது எனக்கு எப்படியிருந்தது தெரியுமா?"

"வைத்தியனை அழைத்துவரப் போனாயா... எப்போது? எல்லாம் விவரமாய்ச் சொல்லு, பொன்னா!"

"அன்று ராத்திரி மகேந்திர மண்டபத்தில் நாம் படுத்துக் கொண்டிருந்தது ஞாபகம் இருக்கிறதா, மகாராஜா?"

"ஆமாம், ஞாபகம் இருக்கிறது. ஐயோ! அன்றிரவை நினைத்தாலே என்னவோ செய்கிறது பொன்னா!"

"மறுநாள் காலையில், நாம் உறையூருக்குக் கிளம்புவதென்று தீர்மானித்துக் கொண்டல்லவா படுத்தோம்? அவ்விதமே மறுநாள் அதிகாலையில் நான் எழுந்திருந்தேன்; உங்களையும் எழுப்பினேன். ஆனால், உங்களுக்குக் கடும் ஜுரம் அடித்துக் கொண்டிருந்தது. உங்களால் நடக்க முடியவில்லை; சற்று நடந்து பார்த்து விட்டுத் திரும்பி வந்து மண்டபத்தில் படுத்துக்கொண்டீர்கள். நேரமாக ஆக, உங்களுக்கு ஜுரம் அதிகமாகிக் கொண்டி

ருந்தது. நான் என்ன தவியாய்த் தவித்தேன் தெரியுமா? தங்களைத் தனியாய் விட்டு விட்டுப் போகவும் மனமில்லை. பக்கத்தில் சும்மா இருப்பதிலும் உபயோகமில்லை. கடைசியில், பல்லைக் கடித்துக்கொண்டு வைத்தியனைக் கூட்டி வரக் கிளம்பினேன். வைத்தியன் இலேசில் கிடைத்தானா? எப்படியோ தேடிப் பிடித்து ஒருவனை அழைத்துக்கொண்டு வந்து பார்த்தால், மண்டபத்தில் உங்களைக் காணோம்! எனக்குப் பைத்தியம் பிடித்தது போலாகிவிட்டது...''



''அப்புறம் என்னதான் செய்தாய்?'' என்று விக்கிரமன் கேட்டான்.

பொன்னன் பிறகு தான் அங்குமிங்கும் ஓடி அலைந்தது, குள்ளனைக் கண்டது, குந்தவிதேவி தன் பல்லக்கில் அவரை ஏற்றிக்கொண்டு போனதைத் தெரிந்து கொண்டது, பராந்தகபுரம் வரையில் தொடர்ந்து வந்து கண்ணால் பார்த்துத் திருப்தியடைந்தது, பிறகு மாமல்லபுரம் போய் சிவனடியாரைச் சந்தித்தது, அவரும் தானுமாகக் கொல்லி மலைச்சாரலுக்குப் போனது, இரகசிய வழியைக் கண்டு



பிடித்தது, சிவனடியாரை மலைமேல் விட்டுவிட்டுத் தான் மட்டும் உறையூர் வந்தது ஆகிய விவரங்களை விவரமாகக் கூறினான்.

பொன்னன் சிவனடியாரைச் சிற்ப மண்டபத்தில் சந்தித்த செய்தி விக்கிரமனுக்கு வியப்பை அளித்தது.

''பொன்னா! அந்தச் சிற்ப மண்டபத்தில்தானே ஒற்றர் தலைவன் வீரசேனனுடன் நான் தங்கியிருந்தேன்? அதே இடத்தில் நீ சிவனடியாரைச் சந்தித்தது வியப்பாயிருக்கிறது பொன்னா! எனக்கு ஒரு சந்தேகங்கூட உண்டாகிறது'' என்றான் விக்கிரமன்.



"என்ன மகாராஜா, சந்தேகம்?"

"அந்த ஒற்றர் தலைவன் ஒருவேளை நமது சிவனடியார்தானோ என்று."

"ஆம், மகாராஜா! ஒற்றர் தலைவன் வீரசேனர்தான் சிவனடியார். நான் மாமல்லபுரத்துச் சாலையிலிருந்து குறுக்கு வழி திரும்பியபோது, எனக்கு முன்னால் ஒரு குதிரை வீரன் போவதைப் பார்த்தேன். தாங்கள் சொன்ன அடையாளங்களிலிருந்து அவர்தான் வீரசேனர் என்று ஊகித்துக் கொண்டேன். அவரே சிற்ப வீட்டுக்குள் நுழைந்துவிட்டு, சற்று நேரத்துக்கெல்லாம் வெளியே வந்தபோது ஜடாமகுடத்துடன் சிவனடியாராக வந்தார்!"

"ஐயோ! அப்படியானால், நான் உண்மையில் யார் என்று பல்லவ சக்கரவர்த்தியின் ஒற்றர் தலைவனுக்குத் தெரியும்... ஆனால், ஆதி முதல் நமக்கு உதவி செய்து வந்திருப்பவர் அவர்தான் அல்லவா? இப்போது என்னைக் காட்டிக் கொடுத்து விடுவாரா?"

"ஒருநாளும் மாட்டார், சுவாமி! அவர் பல்லவ சக்கரவர்த்தியின் ஒற்றர் படைத் தலைவரானபோதிலும், போர்க்களத்தில் தங்கள் தந்தைக்கு வாக்குறுதி கொடுத்திருக்கிறார். அவரால் ஒரு அபாயமும் இல்லை. ஆனால்..."

"ஆனால் என்ன, பொன்னா?"

"வேறொரு பெரும் அபாயம் இவ்விடத்தில் இருக்கிறது. மாரப்ப பூபதிதான் இப்போது சோழ நாட்டுச் சேனாதிபதி

தெரியுமல்லவா? அவருக்குத் தாங்கள் இங்கு வந்திருப்பது பற்றி எவ்விதமோ சந்தேகம் உதித்திருக்கிறது மகாராஜா! நாம் உடனே கிளம்பிப் போக வேண்டும்.''

''இங்கே இருப்பதில் அதை விடப் பெரிய அபாயம் வேறொன்று இருக்கிறது பொன்னா! நாம் உடனே கிளம்ப வேண்டியது தான்'' என்று விக்கிரமன் கூறியபோது, அவனுடைய முகத்தில் ஒருவிதமான கிளர்ச்சியை பொன்னன் கண்டான்.

''அது என்ன அபாயம் மகாராஜா?'' என்று கேட்டான்.

''ஓர் இளம்பெண்ணின் கருவிழிகளில் உள்ள அபாயம்தான்'' என்று கூறி விக்கிரமன் காவேரி நதியைப் பார்த்தான். சற்றுநேரம் மௌனம் குடிகொண்டிருந்தது. பிறகு விக்கிரமன் சொன்னான்:

''உன்னிடம் சொல்லாமல் வேறு யாரிடம் சொல்லப்போகிறேன்? பொன்னா! மூன்று வருஷங்களுக்கு முன்னால் என்னை இங்கிருந்து சிறைப்படுத்திக் கொண்டுபோனபோது, காஞ்சி நகரின் வீதியில் பல்லக்கில் சென்ற ஒரு பெண் என்னைப் பார்த்தாள். அவளே மறுபடியும் மாமல்லபுரத்தில், நான் கப்பல் ஏறிய போதும் கடற்கரையிலே நின்று என்னைக் கனிவுடன் பார்த்தாள். செண்பகத் தீவுக்குப் போய், மூன்று வருஷ காலமான பிறகும் அவளை என்னால் மறக்க முடியவில்லை. அதிசயத்தைக் கேள், பொன்னா! அதே பெண்தான் மகேந்திர மண்டபத்தில் நான் ஜுரமடித்துக் கிடந்தபோது, என்னைப் பார்த்து இங்கே எடுத்து வந்து காப்பாற்றினாள்.''

''மகாராஜா! அப்பேர்ப்பட்ட புண்ணியவதி யார்? அந்த தேவியைப் பார்க்க எனக்கு ஆவலாயிருக்கிறது! பார்த்து எங்கள் மகாராஜாவைக் காப்பாற்றிக் கொடுத்ததற்காக நன்றி செலுத்த வேண்டும்.''

''பொன்னா! விஷயத்தை அறிந்தால் நன்றி என்கிற பேச்சையே எடுக்க மாட்டாய்.''

''ஐயோ, அது என்ன?''

''மூன்று நாட்களாக என் மனத்தில் ஒரு பெரிய போராட்டம் நடந்து வருகிறது பொன்னா! கதைகளிலே நான் கேட்டிருக்கிறேன்; காவியங்களிலே படித்திருக்கிறேன், பெண் மோகத்தினால் அழிந்தவர்களைப் பற்றி! அந்தக் கதி எனக்கும் நேர்ந்துவிடும் போலிருக்கிறது. மேனகையின் மோகத்தினால் விசுவாமித்திரர் தபஸை இழந்தாரல்லவா? அம்மாதிரி நானும் ஆகிவிடுவேனோ என்று பயமாயிருக்கிறது. பொன்னா, அந்தப் பெண் அவ்வாறு என்னை அவளுடைய மோக வலைக்கு உள்ளாக்கி விட்டாள்...!''

பொன்னன் குறுக்கிட்டு, ''மகாராஜா! நான் படியாதவன்; அறியாதவன். இருந்தாலும், ஒரு விஷயம் சொல்ல விரும்புகிறேன்; அனுமதி தர வேண்டும்'' என்றான்.

**ஒரு மரத்தின் மறைவிலிருந்து குந்தவிதேவி வெளியில் வந்தாள். சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு நதிக்கரையில் படகு கட்டியிருந்த இடத்துக்குச் சென்றாள்!**

''சொல்லு பொன்னா? உனக்கு அனுமதி வேண்டுமா?''

''விசுவாமித்திர ரிஷி மேனகையினால் கெட்டதை மட்டும் சொல்கிறீர்கள். ஆனால், பெண்களால் மேன்மையடைந்தவர்கள் இல்லையா, மகாராஜா! சீதையால் ராமர் மேன்மையடையவில்லையா? கிருஷ்ணன் போய் ருக்மணியை எதற்காகக் கவர்ந்து கொண்டு வந்தார்? அர்ச்சுன மகாராஜா சுபத்திரையை அடைந்ததினால்

கெட்டுப் போய் விட்டாரா? முருகக் கடவுள் வள்ளியைத் தேடித் தினைப் புனத்துக்கு வந்தது ஏன்? அதனால் அவர் கெடுதலை அடைந்தாரா?...''

''பொன்னா! சரியான கேள்விதான்



கேட்கிறாய். சீதையினால் ராமரும், ருக்மணியால் கிருஷ்ணனும், சுபத்திரையினால் அர்ச்சுனனும், வள்ளியினால் முருகனும் மேன்மையடைந்தது மட்டுமல்ல. அருள்மொழி ராணியினால் பார்த்திப மகாராஜாவும், வள்ளியினால் பொன்னனும் மேன்மையடைகிறார்கள்.''

''அப்படிச் சொல்லுங்கள்! பின்னே, பெண் மோகம் பொல்லாதது என்றெல்லாம் ஏன் பேசுகிறீர்கள்?''

''கேள், பொன்னா! பெண் காதலினால் மனிதர்கள் சிலர் தேவர்களாகியிருக்கிறார்கள். அவர்கள் பாக்கியசாலிகள். ஆனால், தேவர்கள் சிலர் பெண் காதலினால் தேவத் தன்மையை இழந்து மனுஷ்யர்களிலும் கேடு கெட்டவர்களாகியிருக்கிறார்கள். நான் அத்தகைய துர்பாக்கியன். என் உள்ளத்தைக் கவர்ந்துகொண்ட பெண் அத்தகையவளாயிருக்கிறாள். நான் என்னுடைய தர்மத்தையும், என்னுடைய பிரதிக்ஞையையும் கைவிடுவதற்கு அவளுடைய காதல் தூண்டுகோலாயிருக்கிறது. ஜுரம் குணமானதிலிருந்து, எனக்கு அந்தப் பெண்ணின் நினைவைத் தவிர வேறு நினைவேயில்லை. அவளைப் பிரிந்து ஒரு நிமிஷமாவது உயிர் வாழ முடியாதென்று தோன்றுகிறது. அவளுக்காகச் சுவர்க்கத்தைக்கூட தியாகம் செய்யலாமென்று தோன்றும்போது, சோழ நாடாவது சுதந்திரமாவது? அவளுடன் சேர்ந்து வாழ்வதற்காக காஞ்சி நரசிம்ம பல்லவச் சக்கரவர்த்திக்குக் கப்பம் கட்டினால்தான் என்ன...?''

பொன்னனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. 'விக்கிரமனுக்கு இது கடைசிச் சோதனை' என்று சிவனடியார் கூறியது அவனுக்கு நினைவு வந்தது.

''ஐயோ! என்ன இப்படிச் சொல்கிறீர்கள்? உறையூர்ச் சித்திர மண்டபத்தில், பார்த்திப மகாராஜாவிடம் தாங்கள் செய்த சபதம் ஞாபகம் இருக்கிறதா?'' என்று கேட்டான்.

''ஞாபகம் இருக்கிறது பொன்னா! இன்னும் மறந்து போகவில்லை. ஆனால்,



எத்தனை நாளைக்கு ஞாபகம் இருக்குமோ, தெரியாது. தினம் தினம் என்னுடைய உறுதி குலைந்து வருகிறது. ஆகையினால்தான், உடனே கிளம்பிவிட வேண்டுமென்று சொல்கிறேன். இப்போதே உன்னுடன் வரச் சித்தமாயிருக்கிறேன்; கிளம்பலாமா?'' என்றான் விக்கிரமன்.

''கிளம்பலாம் சுவாமி! ஆனால், இந்தத் தீவில் நமக்கு ஒரு காரியம் இருக்கிறதே! மகாராணி கொடுத்த பெட்டியை இங்கே புதைத்து வைத்திருக்கிறேன்...''

''பார்த்தாயா! அதைக்கூட மறந்து விட்டேன். இன்னும் இரண்டு நாள் போனால் வந்த காரியத்தையே மறந்து விடுவேன்; என்னையே கூட மறந்து விடுவேன்! இன்றைக்கு அந்தப் பெண் வருவதற்குள் நாம் போய்விட வேண்டும். பெட்டியை எங்கே புதைத்திருக்கிறாய்?'' என்று விக்கிரமன் பரபரப்புடன் கேட்டான்.

''சமீபத்தில்தான் இருக்கிறது, சுவாமி!''

''தோண்டி எடுக்க வேண்டுமல்லவா?''

''முன் ஜாக்கிரதையாக மண்வெட்டியும் கடப்பாறையும் கொண்டு வந்திருக்கிறேன்'' என்று சொல்லி, பொன்னன் படகின் அடியிலிருந்து அவற்றை எடுத்துக் கொண்டு வந்தான்.

**விக்கிரமனிடம், "முன்ஜாக் கிரதையாக மண்வெட்டியும் கடப்பாறையும் கொண்டு வந்திருக்கிறேன்" என்றான் பொன்னன்!**

இரண்டு பேரும் விரைவாக நடந்து அந்த அடர்ந்த மாந்தோப்புக்குள்ளே போனார்கள்.

அவர்கள் போய்ச் சற்று நேரத்துக்கெல்லாம், சமீபத்திலிருந்து ஒரு மரத்தின் மறைவிலிருந்து குந்தவிதேவி வெளியில் வந்தாள். சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு, நதிக் கரையில் படகு கட்டியிருந்த இடத்துக்குச் சென்றாள். இன்னும் ஒரு கள்ளப் பார்வை அங்குமிங்கும் பார்த்துவிட்டு, படகை மரத்தின் வேருடன் கட்டியிருந்த கயிற்றை அவிழ்த்துவிட்டாள். படகு மெதுவாக நகர்ந்தது; பிறகு வேகமாய் நகர்ந்தது. சிறிது நேரத்துக்கெல்லாம் வெள்ளப் பிரவாகத்தில் அகப்பட்டுக் கொண்டு அதிவேகமாய்ச் சுழன்று செல்லத் தொடங்கியது. அதைப் பார்த்துக் கொண்டிருந்த குந்தவியின் முகத்தில் குறுநகை பூத்தது.

(தொடரும்)




கதவைத் தட்டும்
கணத்துக்கு முன்னிருந்து
சப்தங்களால் நிரப்பப்பட்டிருக்கிறது வீடு!

யார் யாரோ அழுகிறார்கள்
யார் யாரோ சிரிக்கிறார்கள்!

வீட்டின் அழைப்பு மணியின்
பெரும் சத்தத்தையும் மீறி
விமர்சித்துக் கொண்டிருக்கிறார்கள்
வசைமொழி வார்த்தைகளினூடே!

சிறு தட்டல், பெருந்தட்டலாகி
பெருங்குரலெடுத்து அழைக்கையில்
வேண்டா வெறுப்பில்
கதவு திறக்கும் முகங்களில்
'ஏன் வந்தாய்!' என்பதற்கான நிழற்படம்!

இன்னாரென அறிமுகமாகி
புன்முறுவல் பூக்கையில்
'சீக்கிரம் சொல்லுங்க
நாடகத்தைப் பாதியிலேயே
விட்டுட்டு வந்திருக்கேன்'

வந்த வழி திரும்புகிறேன்
ஆறாத சினத்தோடு
சொற்களால் அறைந்த
முகத்தைத் தடவியபடி!

# ஜோதா அக்பர்

கிட்டதட்ட நாற்பத்தைந்து கோடி ரூபாய் செலவில் எடுக்கப்பட்டிருக்கும் பிரமாண்டமான படம் 'ஜோதா அக்பர்'. சமீபத்தில் வெளிவந்திருக்கும் இந்தியப் படங்களிலிருந்து முற்றிலும் மாறுபட்டு நம்மை, சரித்திர காலகட்டத்துக்கு அழைத்துச் செல்கிறது.

''நான் உங்களை மணக்க வேண்டுமென்றால், எனக்காக உங்கள் அரண்மனையில் ஒரு சின்ன கோயிலைக் கட்ட வேண்டும். அதில் என் கடவுள் கிருஷ்ணரை வைத்து நான் வழிபட வேண்டும்'' என ஜோதா பாய், அக்பரிடம் கேட்க, அவரும் சம்மதித்துத் திருமணம் செய்து கொள்கிறார். அரண்மனையில் பலரது எதிர்ப்பையும் மீறி, ஜோதாவின் 'மதன் கோபாலனுக்காக' மண்டபம் அளிப்பது, அதில் அவள் கிருஷ்ண கானமும், பூஜையும் செய்ய அனுமதிப்பது என அக்பர் பாத்திரம் நம் மன சிம்மாசனத்தில் கம்பீரமாக அமர்த்தப்படுகிறது. அக்பருடன் (ஹ்ருத்திக் ரோஷன்) ஜோதா (ஐஸ்வர்யா ராய் பச்சன்) சரிக்குச் சமமாக வாள்பிடித்துச் சண்டை போடும் காட்சி சபாஷ் போட வைக்கிறது. கணவருக்காக முதன்முதலாக தம் கையால் சமைத்துப் போட வேண்டும் என்று ஜோதா, அரண்மனை சமையலறையில் நுழைய, அங்கே இருக்கும் பாத்திரங்கள் எல்லாமே ஆளுயர அளவில் இருப்பதைப் பார்க்கும்போது காட்சி அமைப்பின் நேர்த்தி ஈர்க்கிறது. அசத்தலான ஏ.ஆர்.ரஹ்மான் இசை வேறு. அட்டகாசமான செட்டிங்ஸ் என பல பிளஸ் பாயிண்டுகள் கொண்ட இப்படத்தைச் சுற்றி ஒரு சர்ச்சை.

'ஜோதா பாய் என்ற ராஜபுத்திர பெண் அக்பரின் மனைவி இல்லை; அவரது மகன் ஜஹாங்கிரின் மனைவி. எனவே, இக்கதையின் அடிப்படையே தவறு. இது ராஜபுத்திரர்



# மனைவியா...?

...களுக்கு மிகப் பெரிய அவமானம். இப்படத்தை நிச்சயம் திரையிடவே கூடாது' என எதிர்ப்புக் குரல் எழுப்பி இருக்கின்றனர் ராஜஸ்தான், உத்திரப்பிரதேசம், ஹரியானா மாநில ராஜபுத்திர சமூகத்தினர்.

இந்தச் சர்ச்சை குறித்து, டில்லி பல்கலைக் கழகத்தின் வரலாற்றுத்துறை தலைவர் பேராசிரியர் சயீத் ஜாஹிர் ஹுஸைன் ஜாப்ரியிடம் கேட்டபோது, ''அக்பர், ஒரு ராஜபுத்திரப் பெண்ணைத் திருமணம் செய்துகொண்டார் என்றும், அவள் ராஜா மன்சிங்கின் சகோதரி என்றும்தான் குறிப்பு உள்ளதே தவிர, அவளது பெயர், எந்த வரலாற்று ஏடுகளிலும் பதிக்கப்படவில்லை. இப்படத்தின் இயக்குனரே இது முப்பது சதவிகிதம் வரலாறும், எழுபது சதவிகிதம் கற்பனையும் கலந்த திரைப்படம் என கூறியுள்ளார். பின் ஏன் இந்த சர்ச்சை எழுந்தது என்றே புரியவில்லை. வரலாற்று அறிஞர்கள் யாருமே, இந்தத் திரைப் படத்தைப் பற்றி அனாவசிய சர்ச்சையை எழுப்பவில்லை. சர்ச்சையையும் சந்தேகங்களையும் எழுப்புவோர் எல்லோருமே வரலாற்றைச் சரியாகப் புரிந்துகொள்ளாதவர்கள்தான்'' என்கிறார்.

**வ**ரலாற்றுப் புத்தகங்கள் பலவற்றை மொழிபெயர்ப்பு செய்த நளினி அகர்வால், ''வட இந்தியாவில் அக்பரின் மனைவி பெயர் ஜோதா என்று கதைகளில் எங்கள் தாத்தா, பாட்டிகள் சொல்லக் கேட்டு வளர்ந்திருக்கிறோம். 'மொகல் ஈ ஆஸம்' என்ற அந்தக் கால சூப்பர் ஹிட் திரைப்படத்தில்கூட அக்பரின் மனைவி ஜோதா என்றுதான் வரும். ஆனால், அந்தக் காலம் முதல் இந்தக் காலம் வரை யாருமே இதைப் பற்றி சர்ச்சை எழுப்பாத பொழுது, ஏன் இந்தப் படத்தைப் பற்றி இவ்வளவு சர்ச்சைகள் என்பது புரியவில்லை. ஜோதா, அக்பரின் மனைவியா அல்லது மருமகளா என சர்ச்சையைக் கிளப்புவது அவ்வளவு சரியாக இல்லை...'' என்றார்.

**- நளினி சம்பத்குமார்**

## –சினிமாவில் சரித்திரச் சர்ச்சை

# சாஸ்திரங்களின் சக்தி!



மற்ற தேசங்களில் அவரவருடைய மதத்துக்கும் படிப்பு முறைக்கும் இடையே முரண் இல்லை. துரதிர்ஷ்டவசமாக நம் தேசத்திலோ, வெள்ளைக்காரர்கள் காலத்தில் ஏற்பட்ட பள்ளிக்கூடங்கள், நம் மதத் தொடர்பே இல்லாமல் உருவாயின. ஜீவனத்துக்காக எல்லோரும் இந்தப் படிப்பிலேயே போய் விழும்படி ஆயிற்று. குழந்தைப் பருவத்திலேயே இவ்வாறு சொந்த சாஸ்திரங்களில் தொடர்பில்லாமல் அன்னிய முறையில் ஊறியதால், நம் புராதன சாஸ்திரங்களில் பற்றோ நம்பிக்கையோ ஏற்படவே வழி இல்லாமல் ஆகிவிட்டது. சாஸ்திரங்களின் உத்தேசம் இன்னது என்றே தெரியாததால், அவற்றின் விதிகளையும் மனம் போனபடி மாற்றலாம் என்று எண்ண ஆரம்பித்துவிட்டார்கள். புராணங்கள் புளுகு மூட்டை, சாஸ்திரங்கள் குருட்டு நம்பிக்கையை வளர்ப்பவை என்பதைத்தான், ஆரம்பத்திலிருந்தே நம் குழந்தைகள் கேட்டு வருகிறார்கள். இவர்களுக்கு எப்படி நம் மத அனுஷ்டானங்களிலும் ஆசாரங்களிலும் பிடிப்பு ஏற்பட முடியும்?

சிறு பிராயத்திலிருந்தே ஆஸ்திக புத்தியை வளர்க்கவேண்டும். நமது மத அனுஷ்டானங்களை விடாமல் பற்றி ஒழுகி, உத்தமமாக வாழ்கிறவர்களின் சங்கத்தில் குழந்தைகளைப் பழக்க வேண்டும். தூய வாழ்வும் மனமும் படைத்த ரிஷிகள் தங்கள் பிரத்தியட்ச அனுபவத்தின் மீது தந்த கிரந்தங்களே, ஆத்ம நலனுக்கு வழி காட்டுபவை என்ற நம்பிக்கையை உண்டாக்க வேண்டும். உலக சௌக்கியம், சமூக வாழ்வு இவற்றையும் ஆத்ம நலனுக்கு உகந்த முறையில் ஒழுங்குபடுத்தித் தரவே ரிஷிகள் சாஸ்திரங்களைத் தந்தார்கள் என்ற விசுவாசத்தை ஏற்படுத்த வேண்டும். அப்போதுதான் லௌகிக சௌக்கியத்துக்கும் மேலாக சமய விதிகளைக் கருதி அனுசரிக்கிற அறிவு நாட்டில் வளரும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

## வாரம் ஒரு பாசுரம்

### சுஜாதா

# எந்தை தந்தை தந்தைக்கே

பாகம் 2

**'நா**ன் என் செயும்' என்று துவங்கும் பாடல் அருணகிரிநாதருடையது, கந்தர் அலங்காரத்தில் வருகிறது என்று அன்பர்கள் குறிப்பிட்டு எழுதியிருந்தார்கள். அவர்களுக்கு நன்றி. அதில் ஒரு அன்பர், இந்தத் தவறினால் சுஜாதாவுக்குத் தமிழே தெரியவில்லை என்று கண்டுபிடித்து, என் மேல் உள்ள வெறுப்பைக் கொட்டியிருந்தார். நாம் ஒருவரைத் திட்டி எழுதும்போது, நம்மை நாமே அற்பமாக்கி கொச்சைப்படுத்திக்கொள்கிறோம் என்பதை அறிந்தால்தான் வார்த்தைகளில் கண்ணியம் வரும்.

எனக்குத் தமிழ் தெரியுமா இல்லையா என்பதைத் தீர்மானிக்க மற்றவர்கள் இருக்கிறார்கள். திருவாய்மொழியில் இராப்பத்து உற்சவத்தில் 'ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி' என்று துவங்கும் பாசுரங்கள் சேவிக்கும்போது, நான் ஒரு முறை திருவரங்கத்தில் இருந்தேன். அந்தப் பாசுரம் இப்போது நினைக்கத்தக்கது.

*ஒழிவு இல் காலம் எல்லாம் உடனாய் மன்னி,*
*வழு இலா அடிமை செய்ய வேண்டும் நாம்*
*தெழி குரல் அருவித் திரு வேங்கடத்து*
*எழில் கொள் சோதி எந்தை தந்தை தந்தைக்கே*

'உரத்து ஒலிக்கும் அருவிகள் கொண்ட திருவேங்கடத்துள் உறையும் எங்கள் தந்தைக்குத் தந்தைக்கும் தந்தையான திருமாலுக்கு, எல்லாக் காலங்களிலும் கூடவே இருந்து குற்றமற்ற சேவை செய்ய வேண்டும்' என்பது ஆழ்வாரின் விருப்பம்.

திருமாலைத் தமது தந்தைக்குத் தந்தைக்குத் தந்தை என்று கூறிக்கொள்வதில் ஒரு அன்யோன்யம், நெருக்கம் தெரிகிறதல்லவா! முன்னோர்களின் முன்னோரில் முதன்மையானவராக திருமாலைக் கருதுவது வைணவ வழக்கம். நம்மாழ்வார் திருவாய்மொழியில் உள்ள இந்தப் பத்து பாசுரங்களிலும் திருவேங்கடமுடையானைத் திகட்டத் திகட்டப் பாடுகிறார்.

'அண்ணல், மாயன், அணிகொள் செந்தாமரைக் கண்ணன், செங்கனி வாய்க் கருமாணிக்கம், சோதிஆகி எல்லா உலகும் தொழும் ஆதி மூர்த்தி' இப்படியெல்லாம் அழைத்துத் தொழுதால், நம் வினைகள் அனைத்தும் ஓயும் என்கிறார்.

திருவேங்கடத்தை எல்லா ஆழ்வார்களும் பாடியுள்ள இருநூற்றிரண்டுக்கு மேற்பட்ட பாடல்களில், நம்மாழ்வாரின் ஐம்பத்திரண்டு பாடல்களும் அற்புத மானவை.

(படிக்கலாம்)



## தஞ்சை பரத்வாஜ்

# நடக்குமென்பார்;

**மேஷம்:** கல்வியில் மேன்மை உண்டாகும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். பூர்வீகச் சொத்து வந்து சேரும். கொடுக்கல் வாங்கல் சிக்கல் தீரும். ராகு / கேது / சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**ரிஷபம்:** பொருளாதார முன்னேற்றம் ஏற்படும். வேலைப் பளு அதிகரிக்கும். மன சஞ்சலம் தீரும். செலவுகள் சுபமானதாக இருக்கும். கல்வியில் முன்னேற்றம் காணப்படும். ராகு / கேது / சனி / குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**மிதுனம்:** வாக்குவன்மை மேலோங்கும். பணக் கஷ்டம் இருக்காது. தூரதேசம் செல்ல வேண்டி இருக்கும். கணவன் / மனைவி உறவு நன்றாக இருக்கும். கல்வி வளம் மேலோங்கும். தெய்வ அனுகூலம் ஏற்படும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். பரிகாரம் தேவையில்லை.

**கடகம்:** கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கை தேவை. குடும்ப வாழ்வில் அனுசரித்துப் போவது நல்லது. கல்வியில் கவனம் தேவை. உடல் நிலை சீராகும். மன சஞ்சலம் விலகும். உத்யோகத்தில் வேலைப் பளு அதிகரிக்கும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**சிம்மம்:** சுப செய்திகள் தேடி வரும். எடுத்த காரியத்தில் வெற்றிகிட்டும். தேர்வில் அதிக மதிப்பெண்கள் கிட்டும். மகப்பேறு பாக்கியம் உண்டாகும். உத்யோகத்தில் நற்பெயர் ஏற்படும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். ராகு / கேது / சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**கன்னி:** வெளிநாடு செல்லும் யோகம் வந்து சேரும். மனபிரம்மை நீரும். சுப செலவுகள் ஏற்படும். தொழில்துறையில் நல்ல வருவாய் கிட்டும். கணவன் / மனைவி உறவு நன்றாக இருக்கும். உத்யோகத்தில் உயர்வு கிட்டும். குரு / சனி வழிபாடு செய்து வருதல் நற்பலனை அளிக்கும்.

**துலாம்:** பூர்வீகச் சொத்து பாகப் பிரிவினை ஆகும். செலவுகள் சுபமானதாக இருக்கும். வழக்கு வெற்றி அளிக்கும். நண்பர் / உறவினர் மூலம் அனுகூலம் ஏற்படும். குழந்தைகள் பற்றிய மனக் கவலை தீரும். குழந்தைகள் இடம்மாறிப் போவார்கள். ராகு / கேது / குரு வழிபாடு செய்து

## பரத்வாஜ்-பதில்கள்

● **என் மகனின் எதிர்காலம் எப்படி இருக்கும்?**

**- கே.பி.பத்மநாபன், கோவை**

உங்கள் மகனுக்கு, நிறைய படிக்கும் யோகம் உள்ளது. கண்டிப்பாக வெளிநாடு செல்வான். 2008-ல் திருமணம் கைகூடும்.

● **என் மகனின் கல்வி பாக்கியம் எப்படியுள்ளது?**

**- எஸ்.புகழேந்தி, புத்தூர்**

உங்கள் மகன் அதிக மார்க் எடுத்து, பொறியியல் துறையில் சேருவான். கவலைப்பட வேண்டாம்.




# நடக்கும்!

வர நற்பலன் அளிக்கும்.

**விருச்சிகம்:** உல்லாசமான வாரம். திருமணக் காரியம் கைகூடும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். உடல்நிலை பாதிக்காது. குழந்தைகள் மூலம் மன சந்தோஷம் கிட்டும். நாணயம் காப்பாற்றப் படும். ராகு / கேது / சனி வழிபாடு செய்து வருதல் நற்பலனை அளிக்கும்.

**தனுசு:** புதிய தொழில் துவங்க ஏற்ற தருணம். திருமணக் காரியம் நிறைவேறும். கல்வி வளம் மேலோங்கும். சத்ரு பயம் இருக்காது. உத்யோகத்தில் உயர்வு ஏற்படும். பிள்ளைகள் எதிர்காலம் பிரகாசமாக அமையும். குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**மகரம்:** எதிலும் நிதானித்துச் செயல் படவும். வாகனத்தில் செல்லும்போது உஷார். நீண்ட தூரப் பயணம் வந்து சேரும். முகம் தெரியாத நபர்களிடம் பழக வேண்டாம். பதவி உயர்வு சற்றுத் தள்ளி போகும். படிப்பில் அதிகக் கவனம் செலுத்தவும். ராகு / கேது / சனி குரு வழிபாடு செய்து வருதல் நற்பலனை உண்டாகும்.

**கும்பம்:** திருமணக் காரியம் கைகூடும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். கடன் சுமை நீங்கும். கொடுக்கல் வாங்கல் சிக்கல் தீரும். வேலையில் பதவி உயர்வு கிட்டும். உல்லாசப் பிரயாணம் வந்து சேரும். ராகு / கேது / சனி வழிபாடு செய்து வருதல் நற்பலனை அளிக்கும்.

**மீனம்:** மன சந்தோஷம் ஏற்படும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். சொத்துகள் வாங்க நல்லத் தருணம். உத்யோகத்தில் இடமாற்றம் ஏற்படும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். பிள்ளைகள் மூலம் மன மகிழ்ச்சி ஏற்படும். குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

நிஜமாகவே அந்த ஆறு ரூபாயைத் தவிர, பையில் வேறு பணமில்லை ஆறுமுகத்திடம். சில்லறையின் சப்தம்கூட அவனது இயலாமையைக் கேலி செய்வது போலிருந்தது. நடையில் வேகம் குறைந்தது. அந்த மிடுக்கான நடை எங்கோ தொலைந்துவிட்டது. தன்னைச் சுற்றி, ஒரு நிரப்ப முடியாத வெற்றிடம் இருப்பதை அவனால் நன்கு உணர முடிந்தது.

அவன் ஒரு கொத்தனார். தினசரி கூலியை நம்பித்தான் நாட்களை நகர்த்திக் கொண்டிருக்கிறான். வெகு நாட்களாகக் கட்டிட வேலைக்கு எந்த அழைப்பும் வரவில்லை என்பதுதான் அவனது கோபம்; ஆதங்கமும்கூட.

ஒரு நாய் துரத்தினால்கூட வேகமாக ஓட முடியாது. அப்படியொரு விரக்தியில் அவன் சென்றுகொண்டிருந்தபோதுதான், எதிரே வந்தார் கணேசன் வாத்தியார்.

''டேய் ஆறுமுகம், எப்படிடா இருக்கே?''

''ஏதோ இருக்கேன் சார்.''

''இறுக்குப் பயலே, முகத்தைச் செழிப்பா வைச்சுக்கிட்டுத்தான் சொல்லேன்'' என்றவர், ''வீட்டு மாடியில ஒரு தண்ணித் தொட்டி கட்டணும்; என்ன முடிச்சுக் குடுத்திடுவியா?'' என்று கேட்க, ''ஆகட்டுங்க'' எனத் தலையாட்டினான்.

''சரி, நாளைக்கே வேலையை ஆரம்பிச்சுடலாம். மறக்காம வந்துடு'' என்று எட்டு வைத்தவர், அவனது கண்களின் ஏக்கத்தைப் புரிந்துகொண்டு, சட்டையின் உள்பையில் கையைவிட்டு, ஒரு நூறு ரூபாயை எடுத்து நீட்ட, தெய்வ தரிசனமாய் அதைப் பெற்றுக்கொண்டான்.



பணம் கைக்கு வந்ததும் அவனது மனதுக்குள், வற்றாத ஜீவநதியின் சலசலப்பு இருக்கத்தான் செய்தது. என்ன செய்யலாம்? என்று யோசித்ததில், அவனது சிந்தையில் முதலில் தோன்றியது மதுக்கடைதான்.

இப்போது, முன்பிருந்த அந்த வேகமான நடை, அவனோடு ஒட்டிக்கொண்டது.

மாரம்பாடி பாஸ்கர்

# குத்தூசி

உள்ளம் கூத்தாட, மதுக்கடை வாசலுக்குச் சென்றபோதுதான் அவனுக்கு ஞாபகம் வந்தது. 'அடடா! மகன் கார்த்திக் ஏதோ நோட்டு புக் வாங்கணும்னு சொன்னானே' என்று தயங்கிய ஆறுமுகம், 'அவன் கிடக்கிறான் பொடியன். அவனுக்காக நமது சௌகரியத்தை விட்டுக் கொடுக்க முடியுமா?' என்ற அசட்டுத் துணிச்சலுடன், மதுவை வாங்கி, வேண்டிய மட்டும் குடித்தான்.

போதை உச்சிக்கு ஏறியதும், வேறு வழியின்றி அவனது கால்கள், இலேசான தடுமாற்றத்துடன் வீட்டை நோக்கி முன்னேறின.

சோற்றை எடுத்து வைத்துவிட்டு மனைவி தூங்கிவிட, மகன் கார்த்திக் மட்டும், ஏதோ காகிதத்தில் கிறுக்கிக் கொண்டிருந்தான்.

அப்பாவைக் கண்டதும் ஆவலுடன் எழுந்த கார்த்திக்குக்கு, ஆறுமுகத்தின் வெறுங்கையைக் கண்டு பெருத்த ஏமாற்றம். மகனின் முகவாட்டத்தைப் புரிந்து கொண்ட ஆறுமுகம், "கோவிக்கக்காத கண்ணா! புக் வாங்க வைச்சிருந்த பணம் கீழே விழுந்திருச்சு" என்று தனது கிழிந்த சட்டைப் பையைக் காட்டினான்.

தனது மகனைச் சமாளிப்பதற்காகவே, தன் சட்டைப் பையைத் தானே கிழித்துக் கொண்ட ரகசியம் அவனுக்குத்தானே தெரியும்!

"சரிப்பா! நாளைக்கு எனக்கு அந்தப் புத்தகத்தை வாங்கிக் கொடு" என்று சொல்லிவிட்டு, வீட்டுப்பாடம் செய்யப் போனான் கார்த்திக்.

பிறகு, தனது சட்டையைக் கழற்றி வீசிவிட்டு, படுத்துக் கொண்டான் ஆறுமுகம்.

**கொ**ஞ்ச நேரம் சென்றது.

தூக்கம் வராதவனாய், சற்றுப் புரண்டு படுத்த ஆறுமுகம், மகனைப் பார்த்து, "என்னடா செய்றே?" என்று கேட்டான்.

"அப்பா, அந்த ஒர்க் புக்கும், நோட்ஸ"ம் இல்லாம என்னால படிக்க முடியலை. அதான் கிழிஞ்சுபோன உங்க சட்டைப் பையைத் தச்சிக்கிட்டு இருக்கேன். நாளைக்காவது வாங்கிட்டு வந்திடுவீங்கல்ல" என்றான் ஏக்கத்தோடு.

மகன் கார்த்திக்கின் கையிலிருந்த ஊசி, தன் மனத்தைக் குத்துவதுபோல் உணர்ந்தான் ஆறுமுகம். ●



"அவர் போலி டாக்டரா தெரியுது?"

"எப்படிச் சொல்றே?"

"பசியே எடுக்கலேன்னு சொன்னேன்... 'அப்ப சாப்பிடுறதை நிறுத்திடுங்க'ன்னு சொல்றார்!"

- கோவில்பட்டி கேசவன்

டென்னிஸில் இன்றைக்கு அமெரிக்கர்களுக்கும் ரஷ்யர்களுக்கும், பெரிய அச்சுறுத்தலாக விளங்குபவர்கள் செர்பிய வீரர்கள். டென்னிஸ் தரவரிசையில் முதல் ஐந்து இடங்களுக்கான பட்டியலில், மூன்று செர்பிய வீரர்களின் பெயர்கள் இடம் பெற்றுள்ளன. இந்திய டென்னிஸ் வீரர்கள் மும்முரமாக அரசியல் பண்ணிக்கொண்டிருக்கிற இத்தருணத்தில், செர்பியர்கள் தங்கள் நாட்டுக்கு முதல் ஒலிம்பிக் தங்க மெடலை வாங்கித் தருவதற்கான ஆயத்தப் பணிகளில் மும்முரமாக ஈடுபட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

யுகோஸ்லாவியா துண்டானபோது உருவான நாடு செர்பியா. ஒரு கோடிக்கும் குறைவான மக்களே அங்கு வாழ்கிறார்கள். வசதிகள் குறைவாக இருந்தாலும் செர்பிய வீரர்கள், இதர ஐரோப்பிய நாடுகளுக்கும் அமெரிக்காவுக்கும் சென்று பயிற்சிகள் எடுத்துவருகின்றனர். அவர்களுடைய டென்னிஸ் திறமையால் செர்பியா நாட்டின் மகிமை இன்று உலகமெங்கும் தெரிய ஆரம்பித்திருக்கிறது. இந்த வருடத் தொடக்கத்தில் நடந்த ஆஸ்திரேலிய ஓப்பன் போட்டியில், டென்னிஸின் கடவுளாகப் போற்றப்படும் ரோஜர் ஃபெடரரை வென்று, கிராண்ட்ஸ்லாம் வென்றார் நோவக் டோகோவிக் என்கிற அற்புதமான செர்பிய ஆட்டக்காரர். தர வரிசையில் அவருக்கு இப்போது மூன்றாவது இடம். பெண்களில்; அனா இவானோவும் (ஹாலிவுட் நடிகை அளவுக்கு அழகானவர்) ஜெலினா ஜாங்கோவும் முதல் ஐந்து இடங்களுக்குள் இடம் பிடித்திருக்கிறார்கள். இந்த மூன்று செர்பியர்களும் தங்களுக்கென்று சொந்தமாக வலைத்தளங்களை உருவாக்கியுள்ளார்கள். இதில் பெண்களின் வலைத்தளங்களைப் பார்வையிடும்போது மட்டும் ஒரு நடிகையின் வலைத்தளத்துக்குள் நுழைந்துவிட்டோமோ என்கிற எண்ணம் ஏற்பட்டுவிடுகிறது. அதிலும் ஜெலினாவின் வலைத்தளம் கண்ணுக்கு விருந்து. அனா, தனது வலைத்தளத்தில் ரசிகர்களின் கேள்விகளுக்குப் பதில்கள் அளித்து வருகிறார். 'உங்களுக்கு அதிகமாக வருகிற கேள்வி எது?' என்று ஒரு கேள்வி கேட்கப்படுகிறது. அதற்கு அனாவின் பதில்-'என்னைக் கல்யாணம் செய்துகொள்கிறீர்களா?' என்று கேட்பவர்கள்தான் நிறைய பேர் இருக்கிறார்கள் என்கிறார். காரணம் இல்லாமல் இல்லை. அனாவின் வயது இருபது. மேலும் சிறப்பாக, அவருடைய டென்னிஸ் சம்பாத்தியம் மட்டும் இதுவரைக்கும் பதினைந்து கோடியைத் தொடுகிறது!



வினாயல் போட்டியில் வென்று, மீண்டும் செய்திகளில் இடம்பிடித்துள்ளார் விஸ்வநாதன் ஆனந்த். அவர்தான் உலக சாம்பியன் என்று நாம் பெருமை பீடத்தில் அமர்ந்துகொண்டிருந்தாலும், ஆனந்துக்கு இன்னொரு பரீட்சை இந்த வருடம் காத்துக் கொண்டிருக்கிறது. செஸ்ஸில் ஃபிட்.

ச.ந.கண்ணன்

டி.இ. மற்றும் பி.சி.ஏ. என இரு அமைப்புகள் உண்டு. ஆனந்த், எஃப்.ஐ.டி.இ. அமைப்பின் உலக சாம்பியன். க்ராம்னிக் என்கிற ரஷ்ய வீரர் பி.சி.ஏ. உலக சாம்பியன். இவர்கள் இருவரும் மோதி அதில் வெற்றி பெற்றால் மட்டுமே, ஆனந்த் தன்னிகரற்ற உலக சாம்பியன் ஆக முடியும். வரும் அக்டோபர் மாதம் ஜெர்மனியில் இந்தப் போட்டி நடக்கவுள்ளது.

'ஆனந்த் முதலில் என்னைத் தோற்கடித்துவிட்டு, பிறகு உலக சாம்பியன் என்று பெருமை கொள்ளட்டும்' என்று ஆனந்த் உலக சாம்பியன் ஆனது முதலே கருவிக்கொண்டிருக்கிறார் க்ராம்னிக். பொதுவாக ஆனந்த் எதற்கும் சலனப்படாதவர். ஆட்டத்தைத் தவிர, வேறு எந்த விஷயத்திலும் மூக்கை நுழைக்கமாட்டார். 'செஸ் போர்டில் என் பதிலைச் சொல்கிறேன்' என்று பதில் சொல்லியிருக்கிறார். மிஸ்டர் க்ராம்னிக், உங்களை மாதிரி சிக்கி பாண்டிங், சிமண்ட்ஸ், ஹேடன் என்று எத்தனை பேரை நாங்கள் பார்த்திருக்கிறோம்.



# சவாலுக்குத் தயாரா ஆனந்த்?

ஒரு தனியார் தொலைக்காட்சியில் ஐந்து இந்திய ஹாக்கி வீரர்கள் பெயரை கேட்டு பலரையும் அணுகியபோது, 'எங்களுக்கு இந்தியக் கிரிக்கெட் அணி வீரர்களை மட்டும்தான் தெரியும்' என்று பதில் சொன்னார்கள். அரசியலும் பொறுப்பற்ற தன்மையும் இன்று இந்திய ஹாக்கியை படுகுழியில் தள்ளியிருக்கிறது. முதல் முறையாக ஹாக்கி அணி ஒலிம்பிக் போட்டிக்குத் தகுதி பெறவில்லை. ஒருவேளை இந்திய ஹாக்கி அணி ஒலிம்பிக் போட்டிக்குத் தகுதி பெற்றிருந்தாலும், அதனால் ஒரு புல்லைக்கூட பெயர்த்திருக்க முடியாது. பீஜிங்கில் கடைசி இடம் பெற்று அவமானத்தோடு வெளியேறுவதைவிட இப்போதைய நிலைமை எவ்வளவோ தேவலை. இந்தியக் கிரிக்கெட் அணி உலகக் கோப்பையில் முதல் ரவுண்டில் வெளியேறிய பிறகுதான் பழைய பஞ்சாங்க பாணிகள் ஒழிக்கப்பட்டு இளரத்தங்களும் புது நடைமுறைகளும் புகுத்தப்பட்டன. அதற்கான பலன் உடனடியாகக் கிடைத்தது. இதுபோலொரு துப்புரவு பணிகள் நடந்தாலொழிய, ஹாக்கி அணியால் மீண்டும் தலைதூக்குவது கடினம்தான்.


• இலவசக் கல்வி



# க்யூபா

அண்மையில், க்யூபா நாட்டுக்கு மருத்துவப் பயணமாகச் சென்று வந்திருக்கிறார் மகப்பேறு மருத்துவர் லட்சுமி நேத்ராவதி. இவர், கம்யூனிஸ்ட் தலைவர் உமாநாத்தின் மூத்த மகள். க்யூபா சென்று வந்த அனுபவத்தை நம்மோடு பகிர்ந்து கொண்டார்.

''கடல் நீரால் சூழப்பட்ட தீவு க்யூபா. வல்லரசான அமெரிக்காவை, வெறுப்பேற்றிக் கொண்டிருக்கும் மிக மிகச் சிறிய நாடு.

'க்யூபாவில், கம்யூனிஸ்ட் பார்ட்டி ஆஃப் க்யூபா' என்கிற ஒரேயொரு கட்சி மட்டுமே இருக்கிறது. ஒரு கட்சிதான் என்றாலும், தேர்தல் உண்டு. சமீபத்தில் நடைபெற்ற பொதுத் தேர்தலில் 96 சதவிகித நபர்கள் வாக்களித்திருக்கின்றனர்.

க்யூபாவின் தாய்மொழி ஸ்பானிஷ். அவர்களது பாடத்திட்டங்களில், ஸ்பானிஷ் மொழி மட்டுமே போதிக்கப்படுகிறது. வங்கிகள், அலுவலகங்கள், மருத்துவமனைகளில்கூட பலருக்கும் சரளமாக ஆங்கிலம் பேசத் தெரியவில்லை.

அனைவருக்கும் கல்வி கட்டாயமாக்கப்பட்டுள்ளது; அதுவும் இலவசமாக. க்யூபர்கள் நூறு சதவிகிதம் கல்வியறிவு பெற்றவர்கள்.

ஒரு கலாசார மையக் கட்டடத்தின் உட்புறச் சுவர்களில், ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரின் பொன்மொழிகள், இரவீந்திரநாத் தாகூரின் கீதாஞ்சலியின் சிலபகுதிகள் ஸ்பானிஷ் மற்றும் ஆங்கிலத்தில் பொறித்து வைத்திருக்கின்றனர்.

உலகிலேயே, குழந்தைகள் இறப்பு விகிதம் க்யூபாவில்தான் மிக மிகக் குறைவு. கல்வியைப் போலவே மருத்துவமும் எல்லோருக்கும் இலவசம். குழந்தை பிறந்த பின்னர், ஒவ்வொரு மாதமும் ஒரு மருத்துவர் வீடு தேடிச் சென்று மருத்துவம் பார்க்கிறார். 'ஆரோக்கியமான குழந்தைகளே, க்யூபா நாட்டின் அஸ்திவாரங்கள்!' என்பது க்யூபா நாயகரான ஃபிடல் காஸ்ட்ரோவின் பிடிவாதமான கருத்து.

மிக முக்கியமாகக் குறிப்பிட வேண்டிய ஒன்று, இங்கு மருத்துவமனைகள் எல்லாமே அத்தனை சுத்தம். நம்மூர் ஐந்து நட்சத்திர ஹோட்டல் ரிசப்ஷன் மாதிரியான, வரவேற்பறை, டைனிங் ஹால், மூன்று பேர் படுக்கை கொண்ட சற்றே விசாலமான அறை


• மருத்துவர் லட்சுமி நேத்ராவதி

# சேம க்ளீன்ப்பா!


● காஸ்ட்ரோ

களோடு வியப்பளிக்கின்றன.

ஒவ்வொரு அறையிலும் தொலைக்காட்சிப் பெட்டி, தொலைபேசி, நவீன கழிவறை, வெந்நீர் வசதிகள். மருத்துவமனை உள் நோயாளிகள், ''தங்களது வீடுகளில் இருக்கும் உணர்வே, தங்களுக்கு இருப்பதாகக் கூறுகின்றனர்.

மேலும், மருத்துவமனை உள் நோயாளிகளுக்கு மூன்று வேளையும் நல்ல தரமான சத்துணவு முழு இலவசம்.

**ம**த்திய ஹவானா நகரில் 'மூன்று சகோதரர்கள்' மருத்துவமனை. க்யூபா புரட்சியில் உயிர்த் தியாகம் செய்த புரட்சியாளர்கள் (மூவரும் சகோதரர்கள்) நினைவாக இயங்கி வரும் மருத்துவமனை. இருபத்தி நான்கு மாடிக் கட்டடம் முழுவதும் மருத்துவமனையாகவே இயங்கி வருகிறது.

CIM எனப்படும் (Centre of molecular immunology) மருத்துவ ஆராய்ச்சி மையம், புதிய மருந்துகள் கண்டு பிடிப்பதில் உலகிலேயே நம்பர் ஒன். தலையிலும், கழுத்துப் பகுதிகளிலும் உருவாகிற, புற்றுநோய்க் கட்டிகளைக் கரைக்கக்கூடிய மருந்து க்யூபாவில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. க்யூபாவின் புற்று நோய் மருந்துகளை, உலகின் ஐம்பத்திரண்டு நாடுகள் இறக்குமதி செய்து கொண்டிருக்கின்றன. அதில் இந்தியாவும் அடக்கம். க்யூபாவின் புற்று நோய் மருந்துகளே மிகச் சிறப்பானவை என இந்திய மருத்துவர்கள் கூறுகின்றனர்.

**பு**ளூ ஸ்கார்ப்பியன் எனப்படும் நீலத் தேள் (அது நீல வண்ணத்தில் இல்லை!) க்யூபாவில் மட்டுமே இருக்கிறது. இதிலிருந்து எடுக்கப்படும் விஷத்திலிருந்து, புற்று நோய்க்குப் புதிதாக மருந்து கண்டு பிடித்திருக்கிறார்கள். அது, அவர்களின் மூன்றாவது கட்ட ஆய்வுகளில் இருந்து வருகிறது.

இன்னொரு வியப்பு. க்யூபாவில் 'லஞ்சம்' என்கிற வார்த்தைக்கே இடமில்லை. க்யூபா என்றால் அத்தனை 'க்ளீன்பா' என்று தலைநிமிர்த்தி என் முனையளவும் சந்தேகமின்றி, சப்தமிட்டு உரக்கக் கூவலாம்!'' எனக் கூறுகிறார் டாக்டர் லட்சுமி நேத்ராவதி.

- திருவரசு

உச்சந்தலையைப் பிளக்கும் உச்சி வெயில் நேரம் அது. ஹைதராபாத்தின் மெக்கா மசூதி வாயிலில், காற்றைக் கிழித்துக்கொண்டு வந்து நின்றது ஒரு கார். கூலிங் க்ளாஸ்; நீலநிற ஜீன்ஸ் பேண்ட், சிவப்பு டாப்ஸ். முக்கியமாக காலில் செருப்பு. பந்தாவாக இறங்கினார் டென்னிஸ் நட்சத்திரம் சானியா மிர்ஸா. வீடியோ கேமரா, டிராலி உள்ளிட்ட படப்பிடிப்பு சாதனங்கள் எல்லாம் வாகனங்களில் வந்து இறங்கின.

'ஏதோ விளம்பரப் படத்துல நடிக்கறாராம் சானியா. இங்கதான் ஷூட்டிங்.'

தகவல் கசியவே ஏராளமானோர் மசூதி வளாகத்தைச் சூழ்ந்தனர். படப்பிடிப்பு நிர்வாகிகள் மசூதி வளாகத்துக்குள் நுழையும் போது அவர்களைத் தடுத்து நிறுத்தினார் வாயில் காவலாளி. 'மசூதி வளாகத்துக்குள் ஷூட்டிங் நடத்த அனுமதிக்க முடியாது. நீங்க அனுமதி வாங்கின சார்மினார் பகுதியில மட்டும்தான் அனுமதிக்க முடியும்' என்றார்.

காவலாளியின் பேச்சு எடுபடவில்லை. படப்பிடிப்புத் தொடங்கியது. அழகிய மரமேஜைமீது அமர்ந்து கால் மேல் கால் போட்டுப் போஸ் கொடுத்தார் சானியா. ஷூட்டிங் முடிந்தது. சானியா, கிளம்பிவிட்டார். ஆனால், சர்ச்சை ஆரம்பமாகி விட்டது.

'என்ன அநியாயம்? பெண்கள் அனுமதிக்கப்படாத மசூதிக்குள், அதுவும் செருப்புக்காலுடன் நுழையலாமா சானியா? மசூதியின் புனிதத்தையே கெடுத்துவிட்டாரே.'

குமுறித்தள்ளிவிட்டனர் அந்த மசூதியை நிர்வகித்து வரும் சிறுபான்மை நலவாரியத்தினர். காவல்துறைக்குப் புகார் சென்றது. வழக்குகள் பதிவாகின. 'விளம்பரத்துக்குப் பணம் தருகிறார்கள் என்றதும், இஸ்லாமிய நெறிமுறைகளைப் புறந்தள்ளி

# தும்மினாலும் சர்ச்சை;



விட்டார் சானியா' என்று விமர்சித்தது மஜ்லிஸ் இத்தெஹாதுல் முஸ்லிமீன்.

விஷயம் சானியாவரை சென்றது. வேறு வழியில்லாமல் மன்னிப்புக் கோரினார்.

'பெண்கள் மசூதி வளாகத்துக்கு உள்ளேயே நுழையக்கூடாது என்று எனக்குத் தெரியாது. இருந்தாலும், என்னுடைய சகோதர - சகோதரிகளின் மனத்தைப் புண்படுத்தியதற்காக மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன்.'

அம்மணி தும்மினாலும் சர்ச்சை; தும்மலை அடக்கினாலும் சர்ச்சை. சமீபத்தில் 'எனக்கு ஹைதராபாத் பிரியாணி பிடிக்கும்' என்று யதேச்சையாகச் சொல்லி வைக்க, 'நாட்டுக்காக விளையாடி வருபவர், பிரியாணி போன்ற கொழுப்பேற்றும்

## கலகம் பிறந்தது எனக்காக – 11



# அடக்கினாலும் சர்ச்சை!

பதார்த்தங்களைச் சாப்பிட்டு, உடம்பைக் கெடுத்துக்கொள்ளலாமா?' என்று சில விளையாட்டு 'ஆர்வலர்கள்' குறைபட்டுக் கொண்டனர்!

சமீபத்தில்கூட ஆஸ்திரேலியாவின் பெர்த் நகரில் நடந்த டென்னிஸ் போட்டியை சானியா பார்த்துக்கொண்டிருந்தார். அவரைச் சுற்றிப் புகைப்படக்காரர்கள்; பத்திரிகையாளர்கள். வழக்கமாக இருப்பவர்கள்தானே என்று அம்மணியும் காலை நீட்டிக்கொண்டு போட்டியை உன்னிப்பாகக் கவனித்துக்கொண்டிருந்தார்.

மறுநாள் காலை அவருடைய புகைப்படங்கள் பத்திரிகைகளில் வெளியாகின. அவற்றில், அம்மணி ஹாயாக தேசியக்கொடிக்கு நேராக காலை நீட்டிக்கொண்டு போட்டியை ரசித்துக் கொண்டிருந்தார். அவ்வளவுதான்.

பகபகவென பற்றிக்கொண்டது தேசப் பற்று நெருப்பு. இந்தமுறை இஸ்லாமிய அடிப்படைவாதிகள் இடத்தை இந்திய தேச பக்தர்கள் பிடித்துக் கொண்டனர்.

'இந்துக்களின் மன உணர்வைப் புண்படுத்திய சானியா மீது தேசிய கௌரவச் சட்டம் 1971ன் கீழ் உடனடியாக நடவடிக்கை எடுக்கவேண்டும்' என்று சீறினார் மத்திய பிரதேசத்தைச் சேர்ந்த ராஜ்குமார் துபே என்பவர். திருப்பதியைச் சேர்ந்த வழக்கறிஞர் ஒருவரும் வழக்கு தொடர்ந்தார். ஆனால், ஒரு விஷயத்துக்காக சானியாவின் உருவ பொம்மையை எரிக்கும் அளவுக்குப் போயினர். எதற்காக?

(அடுத்த வாரம்)

ஆர்.முத்துக்குமார்

# திகைப்பூட்டிய தே.மு.தி.க.!



தே.மு.தி.க. சார்பில், மகளிர் தினத்தையொட்டி நடத்தப்பட்ட மகளிர் பேரணி மற்றும் பொதுக் கூட்டத்தால் திருச்சி திக்குமுக்காடியது! அவற்றிலிருந்து சில ஹைலைட்ஸ்...

சரியாக மாலை 3.30 மணிக்கு பிரேமலதா விஜயகாந்த், மகளிர் பேரணியைத் துவக்கி வைக்க, திருச்சி உறையூர் சாலை ரோடு கோஹினூர் தியேட்டர் ரவுண்டானாவிலிருந்து பேரணி கிளம்பியது.

● தே.மு.தி.க. கட்சிக் கொடியேந்தி பேரணியின் முன்பாக பிரேமலதா விஜயகாந்த் கொஞ்சதூரம் நடந்து வந்தார்.

● மகளிர் பேரணியில், பெண்களுடன் ஆண்களும் கூட்டம்கூட்டமாக நடந்து வந்தனர்.

● கட்சித் தலைவர் விஜயகாந்த், பேரணியைப் பார்வையிட மாலை 3.30 மணிக்கெல்லாம், தென்னூர் மேம்பால மேடைக்கு வந்துவிட்டார்.

● சிறப்பாக அணிவகுத்து வரும் மாவட்ட அணியினருக்குப் பரிசுகள் வழங்குவதற்காக, வேறொரு மேடையில் மூன்று பெண் நடுவர்கள் அமர்ந்து பேரணிக்கு மதிப்பெண் போட்டுக் கொண்டிருந்தனர்.

● சீருடை அணிந்த சுமார் இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண் தொண்டர்களும், சுமார் ஆயிரம் பெண் தொண்டர்களும் பேரணி மற்றும் பொதுக்கூட்ட நிகழ்ச்சிகளுக்குப் பாதுகாப்புப் பணிகளில் ஈடுபட்டிருந்தனர்.

● சேலத்திலிருந்து வந்திருந்த திருநங்கைகள் ஒரு குழுவாகப் பேரணியில் பங்கேற்றது கவனத்தை ஈர்த்தது.

● நாகூரிலிருந்து வந்திருந்த இஸ்லாமியப் பெண்கள், தங்கள் வீட்டுச் சிறுவர்களுடன் 'கோஷா' உடையணிந்து பேரணியில் கலந்து கொண்டனர்.

● தனியார் மருத்துவமனையின் எட்டு ஆம்புலன்ஸ் வண்டிகள், அவசர கால மருத்துவ உதவிக்காக நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன.

● பேரணியில் திரண்டு வந்திருந்த மகளிரணியினரைப்



# "சுய உதவிக் குழுவுக்கு 50 லட்சம்!"

பார்த்து, உற்சாகமாகக் கையசைத்து மகிழ்ச்சி தெரிவித்தார் விஜயகாந்த்.

● வெளிச்சமின்றிப் போகவே, நெரிசலும் தள்ளுமுள்ளுவும் அதிகமானது. பேரணிப் பாதைகளில் பெண்கள் கீழே விழ நேர்ந்து பரபரப்பு ஏற்பட்டது. சொற்ப எண்ணிக்கையில் போலீஸார் நின்று கொண்டிருந்ததால், பெண்களுக்குப் பாதுகாப்புத் தர கட்சியின் ஆண் தொண்டரணியினர் ஓரளவு ஈடுகட்டினர்.

● பெண்களுக்கு 33 சதவிகித இட ஒதுக்கீடு தர வேண்டும் என்கிற கருத்தின் அடிப்படையில், பொதுக் கூட்ட மேடை அமைக்கப்பட்டிருந்தது. மேடையில் தே.மு.தி.க. மகளிரணியின் மாவட்டப் பொறுப்பாளர்கள் அனைவரும் அமர வைக்கப்பட்டிருந்தனர்.

● ''காப்பி தோட்டத் தொழிலாளிங்க நாங்க. எங்க கேப்டன் கட்சி ஆரம்பிச்சதுலேர்ந்து அவுர், எந்த ஊர்ல மாநாடு போட்டாலும், அங்க போயிடுவோம். எல்லாம் எங்களோட கைக்காக செலவு பண்ணித்தான்'' எனக் கூறுகின்றனர் ஊட்டி - கூடலூர் தேவி, ராஜேஸ்வரி.

● மகளிர் தின தே.மு.தி.க. தீர்மானங்களை வாசிக்க வந்த பிரேமலதா விஜயகாந்த், ஒவ்வொரு தீர்மானத்துக்கும் விளக்கமளித்து விரிவாகவே பெண்களைக் கவரும் வண்ணம் பேசினார்.

● பெண்களின் சுய முன்னேற்றத்துக்காக 'ஸ்ரீ சக்தி சுய உதவிக்குழு' என்கிற பெயரில், தன் சொந்தப் பணத்திலிருந்து ஐம்பது லட்ச ரூபாயை, வங்கியில் டெபாசிட் செய்ய உள்ளதாக பொதுக் கூட்ட மேடையில் அறிவித்தார் விஜயகாந்த்.

*செய்தியும், சித்திரங்களும்:*
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

★ அன்னகாமாட்சி அம்மன் சன்னிதி...



## ஓமாந்தூர் கோயில்

# ஓம் வடிவ

ஒரு லட்சம் பக்தர்கள் கூடி ஓமாந்தூரில் சிவராத்திரியைக் கொண்டாடி மகிழ்ந்திருக்கின்றனர். முந்நூறுக்கும் மேற்பட்ட உடுக்கடி பூசாரிகள் 'குறி' சொல்ல, பிரமாண்டமாய் நடக்கும் திருவிழா. திருச்சிக்கு முப்பது கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது ஓமாந்தூர்.

''இந்தக் கோயிலோட ஸ்தல விருட்சம் குன்னி மரம். கோயிலுக்குள் இருபது - முப்பது குன்னி மரங்கள் இருக்கு. இந்த மரம், தமிழ்நாட்டுல வேற எங்கேயும் இல்லேன்னு சொல்றாங்க. அன்ன காமாட்சியம்மன்தான் முக்கிய தெய்வம். கருவறைக்குப் பின்னாடி இருக்கற குன்னி மரத்துல, பிள்ளை வரம் வேண்டி, தொட்டில் கட்டிப் போட்டா, அடுத்த மகா சிவராத்திரிக்குள்ள கரு தரிச்சிடும்'ங்கறது ஒரு நம்பிக்கை. எங்க உறவுக்காரப் பொண்ணு போன வருஷம் இங்க வந்து தொட்டில் கட்டிப் போட்டுச்சு. இப்ப அது ஆறு மாசமா முழுகாம இருக்கு. அந்தப் பொண்ணு சொல்லித்தான் இப்ப நான் இங்க தொட்டில் கட்டிப் போட வந்திருக்கேன்'' எனக் கூறுகிறார் தஞ்சாவூரிலிருந்து வந்திருக்கும் சரஸ்வதி என்கிற இளம்பெண்.

உடுக்கடிக்கும் பூசாரிகளைச் சுற்றி ஆண்களும் பெண்களும் வட்டமாகச் சூழ்ந்து உட்கார்ந்திருக்கின்றனர்.

''தமிழ்நாட்டுல உடுக்கடிக்கிற பூசாரி யாராயிருந்தாலும், முதன்முதலா மகா சிவராத்திரி அன்னைக்கு, இங்க வந்துதான் முத்திரை வாங்கிப் போயாகணும். 'ஓமாந்தூர் மாசி பெரியண்ணா' என்கிற வார்த்தை முதல்ல வந்து விழணும், அப்புறமாத்தான் குறி சொல்ல முடியும். அப்பத்தான் சொல்ற வார்த்தைகள் மெய்யா நடக்கும். நான் இந்தக் கோயிலுக்குப் பதினஞ்சு வருஷமா தொடர்ந்து வந்துக்கிட்டு இருக்கேன்'' என்கிறார் புதுக்கோட்டை மாவட்டம், கீரனூர் அருகேயிருந்து வந்திருக்கும் பழனிச்சாமி என்கிற உடுக்கடி பூசாரி.

அன்ன காமாட்சியம்மன் கருவறையில் புள்ளியாய்த் தொடங்கி, வரிசையாக ஒவ்வொரு சன்னிதியையும் இணைத்து வந்தால், ஓம் என்கிற வடிவம் வந்துவிடும். ஓம ரிஷி உலவிய நிலம். அன்ன காமாட்சியாம் மன் உலா வந்துகொண்டிருக்கும் மண். அம்மன் நீராடிய, ஓம குளம். அதனருகே ஓடுவது ஓம நதி. ஊருக்குப் பெயர் ஓமாந்தூர். மாசி பெரியண்ணசாமி இந்த மண்ணில் காவல் தெய்வமாக காத்து வருகிறார். இந்தக் கோயில் உருவாகி எழுநூற்றைம்பது ஆண்டுகள் ஆகிறது. எங்கள் வம்சாவளியைச் சேர்ந்தவர்களே, தலைமுறை,

**"அன்ன காமாட்சியம்மன் கோயிலில் விக்கிரக வழிபாடு கிடையாது!"**

தலைமுறையாக கோயில் பெரிய பூசாரியாக இருந்து வழிநடத்தி வருகின்றனர். சிவாலயத்துக்கு உரிய முழுமையான அம்சங்கள் அனைத்தும் இங்கு அமையப் பெற்றுள்ளன. இருந்த போதிலும் இங்கு அன்ன காமாட்சி அம்மனே முதன்மையானவள்!'' எனச் சொல்கிறார்



● ஓமாந்தூர் கோயில் சிவராத்திரி

# சன்னிதிகள்!



● மண்ணே திருநீறு...



● பழநியப்பன்



● பெரிய பூசாரி

கோயிலின் அறங்காவலர் ரவிச்சந்திரன்.

''ஓமாந்தூர் அன்ன காமாட்சியம்மன்-மாசி பெரியண்ண சுவாமி ஆலயத்தில், எந்தவொரு சன்னதியிலும் விக்கிரக வழிபாடு இல்லை. ஒவ்வொரு சன்னிதியிலும் புதுத்துணி திரி போட்டு, நெய்விட்டு ஜோதி வளர்க்கப்படுகிறது. ஜோதி வடிவத்திலேயே சுவாமி தரிசனம் காணலாம். வாரத்தில் திங்கள் - வெள்ளி இரு நாட்களில் மட்டும், உச்சி கால பூஜை நடைபெறும். இதர தினங்களில் கோயில் திறப்புக் கிடையாது. தமிழ் நாட்டில் வேறு எந்தக் கோயிலிலும் இல்லாத சிறப்பு ஒன்று. கோயில் வளாகத்தின் பன்னிரண்டு ஏக்கர் நிலத்துக்குள், ஏதேனும் ஓரிடத்தில் மண்ணை வெட்டி எடுத்து, பக்தர்களுக்குத் திருநீறாக இங்கு மட்டுமே வழங்கப்படுகிறது'' என்கிறார் ஓமாந்தூர் கோயிலின் பெரிய பூசாரியார்.

செய்தியும் சித்திரமும் :

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# வெள்ளித்திரை

**கோ**டம்பாக்கம் டீ கடையில் இரண்டு உதவி இயக்குனர்கள் :

"**எ**ன்னடா பாலு, நேத்து 'வெள்ளித் திரை'க்குப் போயிருந்தியாமே. என்ன கதை?"

"சினிமாவுல ஜெயிக்கப் போராடற ஓர் உதவி இயக்குனர், ஹீரோவாகத் துடிக்கிற அவனோட ரூம் மேட். உதவி இயக்குனரோட ஸ்கிரிப்டைத் திருடிட்டுப் போய் ஒரு தயாரிப்பாளர்கிட்டே கொடுத்து, அந்தக் கதையில தானே ஹீரோவாயிடறான் ரூம் மேட்! ஒரு கட்டத்துல, அவனை வைச்சே படம் எடுக்கற வாய்ப்பு உதவி இயக்குனருக்கு வருது. அப்ப சந்திக்கற பிரச்னைகள்தான் கதை."

"நல்லா இருக்கே."

"ஆனா, இதை ரெண்டரை மணி நேரத்துக்கு இழுக்கறது, அலுப்பை ஏற்படுத்திடுது. வடபழனியில பஸ் பிடிச்சு மவுண்ட் ரோடுக்குப் போய், அங்கே இருந்து நுங்கம்பாக்கம் வழியா, ஏவி.எம். ஸ்டுடியோவுக்கு வந்த மாதிரி இருக்கு. படம் ஓடும்போதே மனசுல நிறைய கேள்விகள். பிருத்விராஜ், பத்து நாள் ஊருக்குப் போய்ட்டு வர்றதுக்குள்ளே அவரோட ஸ்கிரிப்டைத் திருடி, ரிஜிஸ்டர் பண்ணி, தயாரிப்பாளர்கிட்டே கொடுத்து ஓ.கே. வாங்கி ஹீரோவாயிடறார் பிரகாஷ்ராஜ்! அறிவுத்திசாலியா காட்டப்படற பிருத்விராஜ், அவ்வளவு சுலபமா ஏமாந்துடறது நம்பக்கூடியதா இல்லை. தவிர, அந்தப் படத்துல ஹீரோயினா நடிக்கிறது அவரோட காதலி கோபிகா. மணிக்கு ஒரு முறை செல்போன்ல பேசிக்கற வங்க, கதையைப் பத்திப் பேசலையாம்!"





"கேரக்டர்ஸ் எப்படி?"

"சினிமாவைப் பத்தின சினிமா வாச்சே. 'ஏணிப்படிகள்' காலத்து இலக்கணம் கொஞ்சமும் மாறலை. குடும்பத்தால் கொடுமைப்படுத்தப்படும் நாயகி, வாய்ப்புக்குப் போராடும் நாயகன், திமிர் பிடித்த ஹீரோ (வில்லன்)... பழைய கறுப்பு வெள்ளை ஃபோட்டோக்களை கலருக்கு மாத்தின மாதிரி இருக்கு."

"முடிவா என்னதான் சொல்றே?"

"'மொழி' படம் வந்தப்ப வித்தியாசமான கதையோடு போனா, தயாரிப்பாளர் பிரகாஷ்ராஜை கவரலாம்னு ஒரு நம்பிக்கை வந்தது. ஸ்கிரிப்டும் ரெடி பண்ணிட்டேன். ஆனா, இப்ப குழப்பமா இருக்குடா."

**- யுவா**

● லலிதா செல்லப்பா, சென்னை-75

? தீக்ஷிதர் - ஓதுவார் மோதலுக்குப் பின்னால், ஏதோ ஒரு சக்தி இயங்கிக் கொண்டிருக்கிறது என்று நினைக்கிறேன். உண்மைதானே?

! அந்தச் சக்தியைவிடப் பெரிய சக்தி இயங்க, இரு தரப்பும் சமாதானம் ஆகிட்டாங்களே!

● எஸ்.கண்ணன், நெய்வேலி

? ஆணும் பெண்ணும் சமம் என்று ஏற்கும் நிலையில், பெண்களுக்கு மட்டும் கூடுதல் சலுகையாக வருமான வரி விலக்கை 1,80,000 ரூபாய் என்று வைத்திருப்பது ஏன்... புரியவில்லையே?

! ஏன், உங்கள் மனைவி வேலைக்குப் போய் கை நிறைய சம்பாதிக்கலையா என்ன? இப்படி தைரியமா கேக்கறீங்க...! மனைவிக்குக் கிடைக்கும் சலுகையில் கணவனும்தானே பயனடைகிறான்!

● எம்.சம்பத், வேலாயுதம் பாளையம்

? ராகுல் காந்தியின் 'இந்தியாவைக் காணுங்கள்' யாத்திரையால் காங்கிரஸ் எந்த அளவுக்குப் பயன்பெறும்?

# ராகுல் காந்தியின் யாத்திரையால் என்ன பயன்?



## நீங்கள் கேட்டவை தராசு

! காங்கிரஸைக் காட்டிலும், ராகுல் என்ற தனி மனிதருக்குத்தான் ஆதாயம். இந்தியாவின் ஆன்மா எங்கே இருக்கிறது என்பதைப் புரிந்துகொள்வார். ஆனால், இந்த யாத்திரை காங்கிரஸுக்கு ஆதாயமாக மாற, ஆன்மாவைப் புரிந்துகொண்டால் போதாது. அதை மதித்து சில காரியங்களைச் செய்ய வேண்டும்.

● எம்.சிவகுருநாதன், தஞ்சை

? ரஜினிகாந்த் அரசியலுக்கு வந்தால்,

**நரேந்திர மோடியை விடச் சிறப்பாகச் செயல்படுவார் என்கிறாரே சோ?**

! சோ என்ன, நரசிம்மராவே ரஜினி முதலமைச்சர் பதவி ஏற்க வேண்டும் என்று விரும்பியதாகச் செய்தி. ஆனால், ரஜினி மறுத்து காங்கிரஸ் மெஜாரிட்டி பெற்று ஆட்சி அமைத்தால், மூப்பனாருக்குத்தான் முதல்வர் பதவி தர வேண்டும் என்றாராம். புத்திசாலி!

● **அ.அப்துல்காதர், சென்னை - 45**

**? பாராளுமன்றத்தில் விரயமாக்கப்படும் நேரம் ஐந்து சதவிகிதத்திலிருந்து 12 சதவிகிதமாக அதிகரித்துள்ளதாக சோம்நாத் சாட்டர்ஜி வருத்தப்படுகிறாரே?**

! இதைவிட வருத்தமாகப் பேசியிருக்காரே! ஜனநாயகத்துக்கு முடிவு கட்ட எம்.பி.க்கள் ஓவர் டைம் வேலை செய்வதாக, நொந்துபோய் பேசியிருக்கார்!

● **ஆர்.ரங்கநாதன், சென்னை - 17**

**? ஆவின் பால் விலை ஏறிவிட்டதே?**

! சிதம்பரம் - கருணாநிதி கூட்டணியில் விலை சரிவு பங்கு மார்க்கெட்டில் மட்டுமே!

● **அ.கலைஉல் ரஹ்மான், திருச்சி-21**

**? போர்ட்டர்களும் நிரந்தரப் பணியாளர்களாக்கப்படுவர் என்று லாலு அறிவித்துள்ளது வரவேற்கத்தக்கதுதானே?**

! வரவேற்கத்தக்கதுதான்; பயணிகளிடம் கூடுதல் கூலி வசூலிக்காத வரை; வருமானம் போதவில்லை என்று வேலை நிறுத்தம் தொடங்காதவரை. பயணிகளுக்குத்தான் எப்படியும் கஷ்டம்!



● ஓவர் டைம் கமென்ட்!



● பேட்டும் முதலில்...!

● **வே.நா.கதிர்வேல், வேலூர் - 6**

**? ஒரு மனிதனுக்கு பக்தி முக்கியமா? ஒழுக்கம் முக்கியமா?**

! ஒழுக்கத்திடம் பக்தியும்; பக்தியின் விளைவான ஒழுக்கமும் முக்கியம்...

● **என்.பாலகிருஷ்ணன், மதுரை**

**? 'என்னைத் தாக்கத் துடிக்கிற அடியாட்களை ஊக்குவிப்பதற்கு முதல்வர் துணையாக இருக்கிறார்' என்று நாஞ்சில் சம்பத் குற்றம் சாட்டுகிறாரே?**

! 'என்னைத் தாக்க அடியாட்களை அனுப்புகிறார்' என்று சொல்ல வேண்டியதுதானே! 'அடியாட்களை ஊக்குவிப்பதற்குத் துணையாக இருப்பவர்களுக்குத் துணை நிற்கிறார்' என்று சுற்றி வளைப்பதிலிருந்தே அவர் நோக்கம் புரியவில்லையோ!

● **ஜோ.பன்னீர்செல்வம், சென்னை-12**

**? 'பள்ளி ஆசிரியர்கள், தி.மு.க. ஆட்சிக்கு நூற்றுக்கு நூறு மதிப்பெண் போடுவர்' என்று பள்ளி கல்வித்துறை அமைச்சர் தங்கம் தென்னரசு கூறியுள்ளது**

❒ ரூ.100 பரிசு பெறுபவர் :
**எஸ்.கண்ணன், நெய்வேலி**

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
**நாஞ்சில் க.நாகராஜன், பறக்கை - 7**

பற்றி...?

! இத்தகைய தாராளத்தை மாணவர்களிடம் காட்ட மாட்டார்கள். அதற்குக் கை வராது!

● **நாஞ்சில் க.நாகராஜன், பறக்கை★**

*? எழுத்தாளரும் சராசரி மனிதரைப் போலத் தற்கொலை செய்து கொள்வது பற்றி...?*

! எழுத்தாளர்களும் சராசரி மனிதர்கள் தாங்க. இன்னும் சொல்லப்போனா, பல எழுத்தாளர்கள் சராசரி மனிதர்களைக் காட்டிலும் ரொம்ப 'சென்சிடிவ்'. பொதுவாக, கலைஞர்களே அப்படித்தான்.



● மதிப்பென்ன பெருமிதம்!



● சுற்றி வளைக்கும் பேச்சு!



● அப்போதைக்கிப்போதே—

● **மங்கதேவன், மும்பை**

*? சமீபத்திய ஷாக்?*

! ஷாக்குக்கு என்ன பஞ்சம்? பேப்பரைப் புரட்டினால் தினந்தோறும் ஷாக்தான். லேட்டஸ்டாக சர்க்கரை ஆலை உரிமையாளர்கள், தமிழகத்தில் கரும்பு விவசாயிகளுக்கு ரூ.105 கோடி வரை பணம் பாக்கி வைத்துள்ளனர் என்ற செய்தி!

● **எம்.ராஜேந்திரன், வால்குடி**

*? 'தமிழ்நாட்டில் மது ஒழிப்பு பற்றி மத்திய அரசிடம்தான் ராமதாஸ் பேச வேண்டும்' என்கிறாரே டி.ஆர்.பாலு?*

! அப்படியானால் கொள்கை அளவில் ராமதாஸின் கோரிக்கையை பாலு ஏற்றுக் கொள்கிறார் என்றாகிறது. சரி, பாலு எங்கே இருக்கிறார்? மத்திய அரசில்தானே? பேசட்டுமே, தமிழகத்தின் சார்பில்! நாடு தழுவிய மதுவிலக்கு. தான் சரிப்படும் என்றாலும், அதற்குத் தமிழகம் முதலில் வழிகாட்டலாமே!

● **கே.எல்.கந்தரூபி, மேலதிருஞ்ஜனபுரம்**

*? மு.க.ஸ்டாலினுக்கு வாழ்த்துச் சொல்ல, தொண்டர்கள் ஒன்பது மணி நேரம் கியூ வரிசையில் காத்திருந்தார்களாமே?*

! அவர் தயவிருந்தால் எதிர்காலத்தில் ஒன்பது மடங்கு தாங்கள் 'உயர' முடியும் என்ற நம்பிக்கையில்தான். இது ஒரு வகை அச்சாரம்தான்.

● **உமரி பொ.கணேசன், மும்பை**

*? அரசியலில் பெண்கள் அதிகம் ஈடுபடத் தயங்குவது ஏன்?*

! கணவன்மார்களுக்கு பினாமியாக இயங்குவதைக் காட்டிலும் அரசியலுக்கு வரத் தயக்கம் காட்டுவதே மேல்! தப்பு நடந்து அம்பலமானால், முடுக்கிவிட்ட ஆண் மகன் தப்பிவிடுவான். பொறுப்பேற்க வேண்டியது பெண்மணிதான்.

புதுவை சந்திரஹரி

# வரன்!

நம் பெண்ணுக்கு வரன் தேடிக்கொண்டிருந்தார் மாணிக்கம். ஒரே பெண் கவிதா. வீட்டோடு மாப்பிள்ளையாகக் கிடைக்காவிட்டாலும், புகுந்த வீட்டில் நம் மகள் பிரகாசிக்க வேண்டுமென்று ஆசை.

புரோக்கர், ஒரு ஜாதகத்தோடு வந்தார்.

''இது அம்சமான நல்ல இடம். பையன் ஜாதகமும் பொருந்தி வருது. சென்னையில, நல்ல கம்ப்யூட்டர் கம்பெனியில சாஃப்ட்வேர் இன்ஜினியர். மாசம் ஒன்னரை லட்சம் ரூபா சம்பளம்'' என்று பையனின் புகைப்படத்தை நீட்டினார்.

பையன் நடிகர் சந்தானம்போல் அம்சமாக இருந்தான்.

''பெண்ணைக் கூப்பிட்டு ஃபோட்டோ காட்டுங்க; முடிச்சுடுவோம்.''

''எம்பொண்ணு எங்க இஷ்டத்துக்கு விட்டுட்டா. எங்களுக்குப் பிடிச்சா அவளுக்குப் பிடிச்ச மாதிரிதான்...'' என இழுத்தார்.

''என்ன இழுக்கறீங்க? முன்னே இப்படித்தான், ஸ்டேட்ஸ்லே இருக்கற பையனைக் கொண்டு வந்தேன். வெளிநாட்டுப் பையனெல்லாம் வேணாம். அவங்க அங்க என்னென்ன தப்பு பண்றாங்களோன்னு மறுத்துட்டீங்க.''

''ம்... இதுவும் யோசிக்க வேண்டியிருக்கு''

''இதிலே என்ன குறை? மாமியார் மாமனார் கொடுமை எல்லாம் கிடையாது. பையனுக்கு முழு சுதந்திரம் கொடுத்திருக்காங்க.''

''அப்ப நிச்சயமா வேணாம்'' புகைப்படத்தைத் திருப்பிக் கொடுத்தார்.



''ஏங்க?'' புரோக்கர் கேட்டார்.

''ம்... இப்ப பசங்க, நாம ஒரு வருஷத்திலே அரசாங்க வேலையிலே வாங்கின சம்பளத்தை, ஒரு மாசத்திலே வாங்கறாங்க. கையிலே குவிஞ்சிருக்கிற பணத்தைச் செலவு பண்ண அலையறாங்க. குடி... கும்மாளம்... கூத்தாட்டம்ன்னு பாதை மாறிப் போயிடறாங்க.''

''அதுக்கு..!''

''அதுக்கு... வீட்டுக்குக் கட்டுப்பட்டு, அம்மா - அப்பா கட்டுப்பாட்டிலே இருக்கற வரனா பாருங்க. ரொம்பச் சம்பாத்தியம் எல்லாம் வேணாம். தன் தேவைக்குப் போக எஞ்சிய பணத்தை பெத்தவங்களுக்குக் கொடுக்கிற பையனா இருக்கணும்.''

''இருபத்தைந்து வருஷ அனுபவத்தில் இப்படியொரு நல்ல மனிதனா?'' ஆச்சர்யத்தோடு புறப்பட்டார் புரோக்கர்.

சோ
எழுதிய

# மஹாபாரதம் பேசுகிறது
ரூ. 600/-

# வால்மீகி ராமாயணம்
ரூ. 600/-

# ஹிந்து மஹா சமுத்திரம்
(3 பாகங்கள்)
ரூ. 600/-

# அதிர்ஷ்டம் தந்த அனுபவங்கள்
ரூ. 145/-

# இந்து தர்மம்
ரூ. 75/-

# எங்கே பிராமணன்?
ரூ. 125/-

## வெறுக்கத்தக்கதா பிராமணீயம்? ரூ 35/-

| | | | |
|---|---|---|---|
| 1. வந்தேமாதரம் | 115.00 | 19. யாருக்கும் வெட்கமில்லை | 40.00 |
| 2. வாஷிங்டனில் நல்லதம்பி | 100.00 | 20. சட்டம் தலை குனியட்டும் | 40.00 |
| 3. சர்க்கார் புகுந்த வீடு | 100.00 | 21. எங்கே போகிறோம்? | 40.00 |
| 4. கூவம் நதிக்கரையினிலே (பாகம் 1) | 130.00 | 22. என்று தணியும் இந்த சுதந்திர தாகம்? | 35.00 |
| 5. கூவம் நதிக்கரையினிலே (பாகம் 2) | 75.00 | 23. இறைவன் இறந்து விட்டானா? | 35.00 |
| 6. கூவம் நதிக்கரையினிலே (பாகம் 3) | 40.00 | 24. இன்பக் கனா ஒன்று கண்டேன் | 25.00 |
| 7. துக்ளக் படமெடுக்கிறார் | 50.00 | 25. சாத்திரம் சொன்னதில்லை | 40.00 |
| 8. அதிசய பிரசங்கம் | 45.00 | 26. சரஸ்வதியின் சபதம் | 35.00 |
| 9. இவர்களைத் தெரிந்து கொள்ளுங்கள் | 50.00 | 27. ஜட்ஜ்மெண்ட் ரிசர்வ்டு | 35.00 |
| 10. யாரோ இவர் யாரோ? | 65.00 | 28. நேர்மை உறங்கும் நேரம் | 30.00 |
| 11. சாதல் இல்லையேல் காதல் | 60.00 | 29. மனம் ஒரு குரங்கு | 40.00 |
| 12. மை டியர் பிரம்மதேவா | 30.00 | 30. ஏன் கூடாது? | 40.00 |
| 13. இந்தியா எங்கே போகிறது? | 20.00 | 31. இரவில் சென்னை | 40.00 |
| 14. துக்ளக் கேள்வி - பதில் I & II | 100.00 | 32. முகமது பின் துக்ளக் | 35.00 |
| 15. ஒண்ணரைப் பக்க நாளேடு | 40.00 | 33. உறவுகள் இல்லையடி பாப்பா | 40.00 |
| 16. காமராஜை சந்தித்தேன் | 60.00 | 34. சம்பவாமி யுகே யுகே | 40.00 |
| 17. புரட்சி கீதை | 35.00 | 35. எதற்காக? | 35.00 |
| 18. திரையுலகைத் திரும்பிப் பார்க்கிறேன் | 40.00 | 36. உண்மையே உன் விலை என்ன? | 45.00 |

எஸ். குருமூர்த்தி எழுதிய **தண்ணீர் விட்டோ வளர்த்தோம்** (3 பாகங்கள்) ரூ. 525/-

பரத்வாஜ் எழுதிய **ஆட்சி முறை - ஒரு பார்வை** - ரூ. 200/-

கிவாஜ எழுதிய
**தமிழ்ப் பழமொழிகள்** (4 பாகங்கள்) ரூ. 400/- **கி.வா.ஜ. பதில்கள்** (3 Vols) ரூ.165/-
**அபிராமி அந்தாதி விளக்கவுரை** (4 பாகங்கள்) ரூ. 300/-
**கந்தர் அலங்காரச் சொற்பொழிவுகள்** (6 பாகங்கள்) ரூ. 735/-

தேவன் எழுதிய

| | | | |
|---|---|---|---|
| 1 துப்பறியும் சாம்பு - முழுவதும் | ரூ.85.00 | 8 ஏன் இந்த அசட்டுத்தனம் | ரூ.55.00 |
| 2 சொன்னபடி கேளுங்கள் | 54.00 | 9 விச்சுவுக்குக் கடிதங்கள் | 55.00 |
| 3 மல்லாரி ராவ் கதைகள் | 80.00 | 10 ராஜத்தின் மனோரதம் | 50.00 |
| 4 அப்பளக் கச்சேரி | 70.00 | 11 சீனுப்பயல் | 80.00 |
| 5 ராஜியின் பிள்ளை | 45.00 | 12 பார்வதியின் சங்கல்பம் | 60.00 |
| 6 போக்கிரி மாமா | 90.00 | 13 பல்லிசாமியின் துப்பு | 75.00 |
| 7 மனித சுபாவம் | 65.00 | 14 சின்னஞ் சிறு கதைகள் | 65.00 |
| | | 15 ராங்கூன் பெரியப்பா | 82.00 |



அல்லயன்ஸ்
(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ் புத்தக நிறுவனம்)
(பழைய) 244, ராமகிருஷ்ணா மடம் சாலை, மைலாப்பூர் - சென்னை 600 004.
தொலைபேசி 24 64 13 14 www.alliancebook.com e.mail: srinivasan@alliancebook.com



# தா.பாண்டியன் பேசியது

**கொ**லை செய்யப்பட்ட தங்கள் கட்சித் தோழருக்கு நடந்த அனுதாபக் கூட்டத்தில், ''ஒவ்வொருவரும் தம்மைப் பாதுகாத்துக் கொள்ள கத்தியும், குறுந்தடியும் வைத்துக் கொள்ள வேண்டும்'' என்று ஆவேசமாகப் பேசியிருக்கிறார் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ்நாடு செயலாளர் தா.பாண்டியன். இந்த வில்லங்க யோசனை ஏன்? என்று அறிய அவரைச் சந்தித்தோம்.

''எங்கள் கட்சியின் முத்தான தோழர் ஜெயக்குமார். திருவாரூர் மாவட்டத்திலுள்ள, மாங்குடி ஊராட்சி மன்றத் தலைவராக இருந்தார். சிறப்பாகப் பணியாற்றியமைக்காக குடியரசுத் தலைவரின் விருது பெற்ற இவர், தாழ்த்தப்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்தவர். கடந்த நான்காம் தேதி கள்ளச்சாராயக் கும்பலால் வெட்டிச் சாய்க்கப்பட்டார். தமக்கும் தம் குடும்பத்தினருக்கும், கள்ளச்சாராய கும்பலால், ஆபத்திருக்கிறது என்று பல முறை காவல் துறையிடம் சொல்லியிருக்கிறார். ஆனால், அவர்கள் அலட்சியம் செய்திருக்கின்றனர். கொலை செய்யப்படுவதற்கு அரை மணி நேரம் முன்புகூட, லோக்கல் இன்ஸ்பெக்டரிடம் தமது உயிருக்குக் காத்திருக்கும் ஆபத்தைச் சொல்லியிருக்கிறார். காவல் துறை மெத்தனமாக இருந்தது. அவர் கொலை செய்யப்பட்டார். இப்படிப்பட்ட நிலையில் தனி மனிதனுக்கு என்ன பாதுகாப்பு இருக்கிறது.''

**உங்கள் கட்சித் தோழர் கொலை செய்யப்பட்டார் என்பதால், இப்படி விபரீதமாகப் பேசலாமா?**

''நான் விபரீதமாகப் பேசவில்லை. விஷயம் அறிந்து, தெரிந்துதான் பேசுகிறேன். கடந்த ஒரு வருடத்தில் பார்த்தீர்களென்றால், பல கட்சிக்காரர்கள் கள்ளச்சாராய கும்பலாலும், சமூக விரோதிகளாலும், கூலிப்படைகளாலும், கட்டை பஞ்சாயத்துக்காரர்களாலும் கொலை செய்யப்பட்டிருக்கிறார்கள். ஆளும் கட்சியின் மாவட்டச் செயலாளரே கொல்லப்பட்டிருக்கிறார். தேசியக் கட்சியின் மாநிலத் தலைவரே தாக்கப்பட்டிருக்கிறார். தமிழ்நாடு முழுவதும் பார்த்தால், கடந்த சில ஆண்டுகளில் வெட்டிச் சாய்க்கப்பட்ட கட்சிக்காரர்களின் எண்ணிக்கை நூறைத் தாண்டும்.''

**கட்சிக்காரர்களுக்குப் பாதுகாப்பு**

# சரியா..?

**கொடுப்பதிலும், கொலை நடந்த பிறகு குற்றவாளிகளைத் தேடுவதிலும், காவல் துறை மிக மெத்தனமாக இருக்கிறது என்று கருதுகிறீர்களா?**

''உண்மையைச் சொல்லப்போனால், அவர்கள் அறிந்தே இதெல்லாம் நடக்கின்றன. கள்ளச் சாராய, கட்டைப் பஞ்சாயத்துப் பேர்வழிகளுக்கு அனுதாபம் காட்டுவதும், அவர்களை எதிர்க்கும் கட்சிக்காரர்களைக் கொலை செய்ய உடந்தையாக இருப்பதும் காவல் துறையின் கறுப்பு ஆடுகளே.''

**காவல் துறை சரியில்லை என்றால், அதை ஒழுங்குபடுத்திக் களையெடுக்க வேண்டியது ஆளும் அரசின் கடமையல்லவா? கூட்டணிக் கட்சியான நீங்கள் இப்படிப் பேசுவது சட்டத்தைக் கையிலெடுத்துக் கொள்வது போல் ஆகிறதே!**

''ஒன்றைப் புரிந்து கொள்ளுங்கள். எந்த ஆட்சி நடந்தாலும், காவல் துறையின் செயல்பாடுகள் மட்டும் ஒரே தரத்தில்தான் இருக்கிறது. தமிழ்நாட்டில், பல மத்திய தர குடும்பத்துக் குழந்தைகள் கடத்தப்பட்டு, பின்னர் ஆயிரம், லட்சம் என்று கொடுத்து மீட்கப்படுகிறார்கள். இது குறித்த புகார்கள் பெரும்பாலும், பதிவு செய்யப்படுவதில்லை.''

**அப்படியென்றால் தமிழ்நாட்டில் சட்டம் ஒழுங்கு கெட்டுவிட்டதா?**

''உடனே இப்படிக் கேட்டுப் பிரச்னையைத் திசை திருப்ப வேண்டாம். தமிழ்நாட்டில் மட்டுமல்ல; இந்தியா முழுவதும் இதே நிலை. இல்லையென்றால், நாட்டின் தலைநகரில், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் தலைமை அலுவலகத்தையே தாக்கும் அளவுக்குத் தைரியம் வருமா?''

– **ப்ரியன்**

'' 'வண்ணத்துப்பூச்சி' மிருதுவானது, அழகானது. அதன் வழியை அதுவே தீர்மானிக்கும். ரொம்ப ச் சந்தோஷமாக உலகத்தைச் சுற்றி வரும். வண்ணத்துப் பூச்சி மாதிரிதான் குழந்தையும். குழந்தையோட மனநிலையைச் சொல்ற படமா இருக்கறதுனால, 'வண்ணத்துப் பூச்சி'யோட பெயரையே தலைப்பா வைச்சேன்'' என்று பேச ஆரம்பிக்கிறார் இயக்குனர் ராசி அழகப்பன். ''இதை எனது நாற்பதாண்டு கால வாழ்வில், நான் அதிகம் உற்று நோக்கிய குழந்தைகளின் உலகத்தைப் பதிவு செய்ய நினைத்தேன். பரபரப்பான விஞ்ஞான, பொருளாதாரத் தேடல் உலகத்தில், பாசம் ரொம்பவும் குறைந்துபோய்விட்டது.

குழந்தைகளுக்காக 'கனவு' காணும் பெற்றோர்கள் அவர்கள் தமக்கென்று சிந்தனையை வைத்துள்ளார்கள். நீங்கள் உங்கள் கருத்துகளை அவர்கள் மேல் திணிக்காதீர்கள்' என்கிற கருத்தில் எனக்குப் பெருத்த உடன்பாடு உண்டு. இளம் வயதில் தாயை இழந்த நான், மற்ற பிள்ளைகளின் உணர்வுகளை அதிகமாய் நேசிக்கிறேன்; உணர்கிறேன்.

என்னைப் பற்றிச் சொல்லணும்னா நான் கமல் சாரோட அசிஸ்டென்ட்னு எல்லோருக்கும் தெரியும். 'அபூர்வ சகோதரர்கள்' படத்திலிருந்து 'விருமாண்டி' வரைக்கும் அவரோடு ஒர்க் பண்ணியிருக்கேன்.

கதை, கவிதை, கட்டுரையும் பத்திரிகையில எழுதியிருக்கேன். அதைப் பார்த்துதான் கமல்சார் எனக்கு உதவி இயக்குனர் வாய்ப்புக் கொடுத்தார். எப்படி ஒரு நல்ல உதவி இயக்குனரா வேலை பார்த்தோமோ,

# பட்டாம்பூச்சிகளின்

எத்தனை பேர் இருக்கிறார்கள். பெற்றோர்கள் குழந்தைகளோடு உறவாடுகிற இனிய நிகழ்வுகளை எப்படிச் சொல்வது. 'பெற்றோர்' என்பது அதிகாரம் செலுத்தும் அரச பீடம் அல்ல. அன்பு தரக் கிடைத்த மகிழ்விடம். 'கலீல் கிப்ரான்' ஒரு கவிதையில் சொன்னது போல், 'குழந்தைகள் உங்கள் குழந்தைகளே அல்ல - அவர்கள் உங்கள் வழியாக வந்தவர்கள்.

அதே மாதிரி ஒரு நல்ல இயக்குனரா உலகத்துக்கு, நிரூபிக்கணும்னு ஆசைப்பட்டுதான் தமிழ் ரசிகனுக்குப் பிடிச்ச மாதிரி ஒரு கதையைத் தேர்ந்தெடுத்து, 'வண்ணத்துப்பூச்சி'யை உருவாக்கிட்டு இருக்கேன். 'வண்ணத்துப்பூச்சி' கதையை எத்தனையோ தயாரிப்பாளர்கள்கிட்ட போய்ச் சொன்னேன். அந்தப் படத்தைத் தயாரிக்க யாருமே முன் வரல. ஒரு நல்ல கதை சிதைந்து



**இயக்குனர் ராசி அழகப்பன் பேட்டி**



'வண்ணத்துப் பூச்சி' படத்தில் ஸ்ரீலட்சுமி

வெற்றி கண்டது. அதேபோல 'வண்ணத்துப்பூச்சி' தனித்தனிமையோடு ஒரு சிறுமியைப்பற்றி எடுக்கப்பட்டது. தாத்தாவா பாலாசிங் நடிச்சிருக்காரு. பேத்தியா ஸ்ரீலட்சுமி நடிச்சிருக்காங்க. படத்தைப் பற்றி நான் சொல்றதைவிட நீங்கதான் சொல்லணும். இந்தக் கதை தமிழ்ல மட்டும் நின்னுபோகக் கூடாதுன்னு, தெலுங்கில் எஸ்.பி.பாலசுப்பிரமணியன் தாத்தா கேரக்டர்ல நடிக்கறதுக்குப் பேசலாம்னு



# உலகம்...

போகக் கூடாதுன்னு, நானே அந்தப் படத்தைத் தயாரிக்க முன்வந்தேன். முதல்ல எனக்குக் கொஞ்சம் கஷ்டமாதான் இருந்துச்சு. அதுக்கப்புறமா படத்தைச் சுலபமா முடிச்சுட்டேன்.

சில பேர் 'கமல்கிட்ட போக வேண்டியதுதானே, அவர்கிட்ட கதையைச் சொன்னீங்களா'னு கேட்டாங்க. கேட்கிறவங்களுக்கு ஒரு சிரிப்பு மட்டும்தான் என் பதில்.

தாத்தாவுக்கும் பேத்திக்கும் உள்ள பாச உறவுதான் 'வண்ணத்துப்பூச்சி'. ஹிந்தியில் அமீர்கான் இயக்கிய 'தாரே ஜமீன் பர்' என்ற படம் முழுக்க முழுக்க ஒரு சிறுவனைப் பற்றி எடுத்து

இருக்கேன்.

வண்ணத்துப்பூச்சி கால இடைவெளி, மன இடைவெளியைப் போக்கி, சிறந்த குழந்தை உலகத்தைச் சுட்டிக்காட்டும் என்பது நிச்சயம். அது வெறும் திரைப்படமல்ல. உங்கள் குழந்தைகளின் முகவரி'' என்று பேசி முடிக்கும்போது, அவர் முகம் குழந்தையின் முகமாக மாறியிருந்தது.

– ஆ.முத்துராமலிங்கம்

# தங்கக்கோயில் தவறேதும்

**வேலூர் சக்தி**

**பக்தர்களை ஈர்க்கும் இடமாக வேலூர் இன்று மாறிவிட்டது. அதற்குக் காரணம், சமீபத்தில் அங்கு உருவான பிரம்மாண்ட தங்கக் கோயில். தமிழ்நாடு சுற்றுலா சிறப்புப் பேருந்துகூட இதற்கு விடப்படுகிறது! ஸ்ரீ நாராயணி பீடத்தின் சார்பாக, வேலூரரை ஒட்டியுள்ள ஸ்ரீபுரத்தில் உருவாகியிருக்கும் இந்தப் பொற்கோயிலை அமைத்தவர் அருள்மிகு சக்தி அம்மா. பொதுவாக, பத்திரிகைகளுக்குப் பேட்டியளிக்காதவர், கல்கிக்கென பிரத்யேகப் பேட்டிக்கு இசைந்தார். இனி அவரோடு பேசுவோம்...**

***உங்கள் பார்வையில் உண்மையான ஆன்மிகம்?***

''பலர், ஆன்மிகம் என்றால் விரும்புவதை அடைவது என்று நினைக்கிறார்கள். கேட்பதைத் தரும் என்பதைவிட, நமக்கு அவசியமானதைத் தருவதே ஆன்மிகம். அது நம்மைப் பற்றி உணரவைத்து தெய்வத்திடம் கொண்டு போய்ச் சேர்க்கும். ஆன்மிகப் பாதையின் நோக்கம் தெய்வத்தைப் பற்றிய உயர்ந்த ஞானத்தை அடைந்து, அதன் மூலமாக அன்பை உருவாக்குவதாகும். முதிர்ந்த அளவுக்குப் பிறருக்கு நன்மை செய்து அமைதியுடனும் ஆனந்தத்துடனும் வாழ்வதாகும்.''

***டீலர் சாமியார்கள் அதிகமாகிவிட்ட நிலையில், மக்கள், சுயநலமில்லாத யோகிகளையும் சாமியார்களையும் எப்படி அடையாளம் காண்பது?***

''மக்களின் நம்பிக்கைக்கு வேட்டு வைக்கும் சாமியார்கள் தோன்றுகிறார்கள் என்பதை விட, மக்களின் அறியாமையால், அவர்கள் தோற்றுவிக்கப்படுகிறார்கள் என்பதே உண்மை. நம்முடைய கஷ்டங்களுக்கும், துன்பங்களுக்கும் காரணம், பூர்வஜென்மத்தில் நாம் தெரிந்தும் தெரியாமலும் செய்த பாவங்களே. இவற்றுக்குப் பரிகாரம், நாம் செய்யும் நல்ல காரியங்களேயாகும். எனவே, கர்மாவைப் பற்றி நாம் தெரிந்துகொள்ளும் போது, நமக்கு வரும் துன்பங்களைத் தாங்குகிற சக்தியும் அதி



விருந்து விடுபட ஆற்றலும் கிடைக்கும்.''

**அதிகமான பொருளாதார சுதந்திரத்தால், சீர்கெட்டுக்கொண்டிருக்கும் இளைய தலைமுறையை நல்வழிப்படுத்த தங்கள் யோசனை?**

''ஒரு மனிதனுக்குக் கிடைக்கும் செல்வம் நெருப்பைப் போன்றது. அதைப் பக்குவமாகக் கையாளாவிட்டால், அது நம்மையே எரித்துவிடும். அதேபோல் நமக்குக் கிடைத்த பொருள் நமக்காக மட்டும்தான் என்று எண்ணும்போது, அது

# இல்லை!

## அம்மா பேசுகிறார்



ஆசை என்னும் அடங்கா தீயை ஏற்படுத்தி மனிதனின் அமைதியையும், ஆனந்தத்தையும் அழித்துவிடும். எனவே, நமக்குச் செல்வம் கிடைக்கும்போது, அடுத்தவர்களுக்கு நன்மை செய்வதற்காக தெய்வம் நமக்களித்த சந்தர்ப்பம் என்று எண்ணவேண்டும்.''

**காலங்காலமாகக் கடைபிடிக்கப்படும் மரபுகளை மாற்றலாமா?**

''எந்த மாற்றங்களாயினும், மன அமைதிக்குப் பங்கம் விளைவிக்காத வழி

**''தினந்தோறும் ஐம்பது இஸ்லாமியர்கள், அவர்கள் கலாசாரப்படி உடையணிந்து பகிரங்கமாகவே ஸ்ரீ புரத்துக்கு வந்து செல்கிறார்கள்''**



யில் அதை ஏற்றுக் கொள்ளலாம். ஒரு காலத்தில் கோயில்களில் நடைபெறும் அர்ச்சனை, யாகம் போன்றவற்றுக்கு அறிவு பூர்வமான ஆதாரங்கள் தர முடியாத சூழ்நிலை இருந்தது. ஆனால், இன்றோ அறிவியல் வளர்ச்சியில் அதன் கண்டு பிடிப்பான ரேடியோ, தொலைபேசி, தொலைக்காட்சி, செல்பேசி போன்ற கண்டுபிடிப்புகளால், ஒளி, ஒலி மற்றும் மின்காந்த அலைகள் போன்ற பல விஷயங்களை, இன்றைய விஞ்ஞான வளர்ச்சியின் மூலம் நாம் தெரிந்துகொண்டுள்ளோம். இவை தொன்மையான நம் சடங்குகளுக்கு ஆதாரத்தைத் தருகின்றன. இந்த வகையில், காலத்துக்கேற்ற மாற்றம் என்பது, மனித வாழ்வுக்கும், மன அமைதிக்கும் வளர்ச்சியைத் தரும் பட்சத்தில் நலம்.''

***இன்றைக்குப் பிரபலமாக உள்ள யோகிகளும் சன்னியாசிகளும், புராணம் மற்றும் இதிகாசங்களில் கூறப்படும் கருத்துகளைத் தங்கள் கருத்துகளாகச் சொல்கிறார்களே?***

''சூரியன் என்பது ஒன்றுதான். அது யுகம், யுகமாக ஒரே மாதிரிதான் இருக்கின்றது. நாம் எங்கிருந்து பார்த்தாலும் நம் கண்கள் கூசும்படி ஒளிர்ந்துகொண்டேயிருக்கின்றது. அதேபோல சத்தியமும் ஒன்றுதான். அதை யார், எவ்வளவு காலம், எப்படிக் கூறினாலும் அது ஒன்றாகத்தான் இருக்கும்.''

***எளிமையான வழிபாட்டைத்தான் இந்துமதம் வலியுறுத்துகிறது. அப்படியிருக்க பிரம்மாண்டமான தங்கக் கோயில், மக்களைக் கவர்ந்தாலும், அவசியம்தானா?***

''இது வெறும் பொற்கோயில் மட்டுமல்ல; இங்கு இது அமைந்திருப்பதன் நோக்கம், மக்களுக்கு ஞானத்தைக் கொடுப்பதாகும். 'ஏன் மனிதப் பிறவியாக வந்திருக்கிறோம்' என்ற ஞானத்தை அவனுக்கு உண்டாக்க வேண்டுமென்றால், அவனை ஈர்க்கும் சக்தியொன்று வேண்டும். இன்றைக்கு உலகம் லௌகீகத்தில் அல்லவா இருக்கிறது. எனவே, அவனது பாதையிலேயே போய் அவனை ஈர்க்கத்தான் இந்தப் பொற்கோயில். இப்போது, 'பொற்கோயில்' என்ற பிரமிப்புடன் இலட்சக் கணக்கில் வருகிறார்கள் மக்கள். இங்கே வருபவர்கள், நட்சத்திர வடிவப் பாதையில் சென்று, இறுதியில் அம்பாள் லட்சுமி நாராயணியைத் தரிசனம் செய்ய வேண்டும். போகும் வழியெல்லாம் எந்த மதத்தவர்களும் ஏற்றுக்கொள்ளும் வகையில் பொன்மொழிகள்; மனிதன் தெரிந்துகொள்ள வேண்டிய அடிப்படை விஷயங்கள்; செவிக்கு இதமாக ஒலித்துக் கொண்டிருக்கும் பஜன்கள். எனவே, இங்கே வருபவர்கள், திரும்பிச் செல்லும்போது, நல்ல மனமாற்றத்தோடு செல்கிறார்கள்.''

***ஸ்ரீபுரத்தைத் தேர்ந்தெடுத்தது ஏன்?***

''ஊருக்கு எல்லையிலுள்ள மலையை ஒட்டி இருக்கிற கிராமமாதலால், இது மலைக்கோடி கிராமம் ஆனது. இது 'அரி'யூர் பஞ்சாயத்து. மலையின் பெயர்- தொல்பொருள் துறை சொன்னபடி- 'கைலாஷ்கிரி.' மலையின் மேல் சூரியன் படாத தீர்த்தம் (சுனை) இருக்கிறது. அதற்கு பிரம்ம தீர்த்தம் என்று பெயர். மும்மூர்த்திகள் பல யுகங்களாக சாந்நித்யத்துடன் வாழ்கிற பூமி. எனவே, தேர்ந்தெடுத்தோம்.''

***மாற்று மதத்தினரும் இங்கு வழிபடலாமா?***

''எல்லா மதத்தைச் சேர்ந்தவர்களும் வந்துகொண்டுதான் இருக்கிறார்கள். குறிப்பாக, தினந்தோறும் ஐம்பது இஸ்லாமியர்கள், அவர்கள் கலாசாரப்படி உடையணிந்து பகிரங்கமாகவே வந்து செல்கிறார்கள். எந்த வகையில் அவர்கள் திருப்தி கொள்கிறார்களோ, அந்த வகையில் ஏற்றுக் கொள்கிறார்கள். அவர்கள் கடவுள் என்று வணங்கி வரும் சக்தி, இங்கிருப்பதாக அவர்களது உணர்வு சொல்வதாலேயே வருகிறார்கள்.''

***நூற்றுக்கணக்கான கிலோ தங்கத்தை இப்படி ஒரே இடத்தில் முடக்கினால் தங்கம் விலை உயராதா?***

இந்தியாவில் ஓர் ஆண்டுக்குச் சுமார் 800டன்கள் தங்கம் இறக்குமதி செய்து விற்பனை செய்யப்படுகிறது. ஸ்ரீபுரத்தில் உபயோகப்படுத்தப்பட்ட தங்கத்தின் அளவு 1.5 டன். இதில் என்ன வித்தியாசம் என்றால், உலகில் மற்றவர்கள் வாங்கும் தங்கம் யார் கண்களுக்கும் தெரிவதில்லை. பூட்டி வைத்துப் பொக்கிஷமாகப் பாதுகாக்கப் படுகிறது. ஆனால், பிரம்மாண்டமான தெய்வாம்சம் நிரம்பிய ஸ்ரீபுரம், உலக மக்கள் அனைவருக்கும் அர்ப்பணிக்கப் பட்டுள்ளது.''

***ஸ்ரீபுரம் கட்டிய பணத்தில், விளக்கேற்ற முடியாத கோயில்களுக்கு நிதியுதவி கொடுக்கலாமே? சிதிலமான பல பழந்திருக்கோயில்களுக்கு புனர்நிர்மாணம் செய்யலாமே?***

''உண்மைதான், அதையும் ஜோதி ஸ்வரூபிணி என்ற திட்டத்தின் மூலம் செய்துகொண்டு வருகின்றோம். இதுவரை சுமார் 1500 கோயில்களுக்கு நிதியுதவி செய்து, கும்பாபிஷேகம் செய்து இருக்கின்றோம். ஸ்ரீபுரம் உருவாக்கியதன் மூலம் பக்தியையும், தர்மத்தையும், தர்மசிந்தனையையும் மனிதர்களிடையே வளர்த்து, அதன் மூலம் கோயில்களில் விளக்கு ஏற்றுவது மட்டுமில்லாமல், மேலும் பல தர்மகாரியங்களை அவர்கள் மூலம் ஸ்ரீபுரம் செய்துகொண்டிருக்கின்றது.

சந்திப்பு: **ஸ்ரீநி**



**ஜே.துரைராஜ், சென்னை**

**மறைந்த எழுத்தாளர் சுஜாதாவைப் பற்றி சில வார்த்தைகள்...?**

பல வார்த்தைகளால் நம்மை வசீகரித்தவரைப் பற்றி சில வார்த்தைகளா..! சுஜாதா இல்லாத பத்திரிகை, கோயில் இல்லாத ஊர். எழுத்தறிவித்தவன் இறைவன் என்பார்கள். சுஜாதா எழுத வந்த இறைவன். பத்திரிகை என்பதில் வரும் அந்தக் 'கை' ஒடிந்துவிட்டது. சாதாரணமாக பக்கங்களைக் கூட்டினால், பத்திரிகையின் விலையும் கூடும். இனி பத்திரிகைகள் விலையைக் குறைக்க வேண்டிய கட்டாயம் - சுஜாதா பக்கங்கள் இனி இருக்காதே. நான் பெங்களூரில் நாடகம் போடும்போது, தவறாமல் நாடகம் பார்க்க வருவார். 'அந்த ஸ்ரீரங்கத்து தேவதை என் நாடகத்தை ரசிக்கிறாரா' என்று சவுடையா-ஹால் படுதா ஒட்டை வழியாக, டென்ஷனாகப் பார்ப்பேன். கண்ணில் ஜலம் வர, எல்லா ஜோக்குகளுக்கும் 'வஸந்த்' போல கூட்டமில்லாமல், வெகுளியாகச் சிரிப்பார். அதே சுஜாதா, நாடகம் முடிந்ததும் 'என்னென்ன மாறுதல்கள் செய்தால், நாடகம் மேம்படும்' என்பதைப் பட்டியலிட்டு 'கணேஷ்' போல அலசுவார். ஒரு நல்ல ட்யூஷன் வாத்தியாரை என் போன்றோர் இழந்துவிட்டோம். அவருக்கு திவ்யப்-ப்ரபந்தத்தின் மீது ஏக வாஞ்சை. அதன் அற்புதமான வெளிப்பாடே 'வாரம் ஒரு பாசுரம்'. எனக்கென்னமோ பத்திரிகைகளைவிட, சுஜாதாவின் மறைவு ஆன்மிகத்துக்குப் பெரிய நஷ்டமாகத் தோன்றுகிறது. ஒன்று நிச்சயம். அமரராகி வானுலகம் சென்ற அவர் நிச்சயம் பெருமாளோடு வைகுண்டத்தில் தங்குவதைவிட, தான் காதலித்த தமிழை வளர்த்த ஆழ்வார்களோடு சொர்க்கத்தில் இருப்பதையே விரும்புவார். ஏனோ தெரியவில்லை, சுஜாதாவைப் பற்றி நினைக்கும்போதெல்லாம், Peter Russel எழுதிய From Science to God புத்தகத் தலைப்பு தான் ஞாபகத்துக்கு வருகிறது. காத்திருப்போம். அவருடைய 'நரேந்திரனின் விநோத வழக்கு' நாடகத்தில் வருவது போல, நாளை ஒரு prodigy வருவான். நான்கு வயதிலேயே கதை, கட்டுரைகள் எழுதுவான். அவனை சுஜாதா என நாம் அடையாளம் கண்டு கொள்வோம்.

# காதல் சைவமா...




**என்.பாலகிருஷ்ணன், மதுரை**

ஒரு கோழை




***எப்போது வீரனாகிறான்? ஒரு வீரன் எப்போது கோழையாகிறான்?***

சாவை எதிர்கொள்பவன் வீரன். வாழ்வை எதிரியாகக் கொள்பவன் கோழை.

**ஆர்.கோபாலன், மேற்கு மாம்பலம்**

***பத்து தலை ராவணனுக்கு ஜல தோஷம் பிடித்தால் என்ன செய்திருப்பான்?***

'அட ராமா! இப்படி ஆயிடுத்தே' என்று பத்து தலைகளையும் பிய்த்துக்கொள்வான். ஜலம், அதாவது கடல் தாண்டி கவர்ந்து சென்று சீதையை சிறை வைத்ததுதான், ராவணனைப் பிடித்த தோஷம்.

**என்.கோமதி, நெல்லை**

***முருகருக்கு ஆறு முகம், பன்னிரண்டு கைகள், கால் மட்டும் ஏன் இரண்டுதான்?***

இரண்டு கால் இல்லை. மூணு கால். அதாவது பன்னெண்டு கால் மூணு. அந்த மூணு காலுல ஒரு call, நமது பிரார்த்தனையைக் கேட்கும் in coming call. ரெண்டாவது call பிரார்த்தனையை நிறைவேற்றும் out going call. மூணாவது, ஆறுமுகத்தை மறந்து நாம் வேறு முகத்தைப் பராக்கு பார்த்துக் கொண்டிருக்கும் போது, நமக்காக அவர் try பண்ணுகிற missed call.

**ஆர்.ஆர்.தமன், சென்னை**

***மாமியார் எதைச் சொன்னாலும் அதற்கு Not என்பதாலா? இல்லை, கணவனை முந்தானை முடிச்சாக Knot போட்டு முடிந்துகொள்வதாலா? எந்தக் காரணத்துக்காக 'நாட்டுப் பெண்' என்ற பெயர் வந்தது.***

திருமணத்துக்கு முன்பு ஆயிரம் திறமைகள் கொண்டவளை, ஹவுஸ்-ஒய்ஃப் என்ற பேரில் ஹவுஸ்-அரெஸ்ட்டாக்கி, அவளைப் பூஜ்யமாக அதாவது Nought ஆக்கிவிடுவதாலும் இருக்கலாம் அல்லவா!

**யமுனா, ஸ்ரீரங்கம்**

***உலக அளவில் டாப் 10 கிரிக்கெட் வீரர்களைப் பட்டியலிடுங்கள் பார்க்கலாம்.***

பட்டியலிட்டால், அந்த பத்து வீரர்களும், 'டாப் டென்'டுல்கர்களாகத்தான் இருப்பார்கள். ஆஸ்திரேலியாவை, க்ளோஸ்திரேலியாவாக்கிய இந்திய அணியில் இப்போது இளமை ஊஞ்சலாடுகிறது. ஊஞ்சலை ஆட்டி விடுபவர், முதிர்ச்சியான சச்சின் டெண்டுல்கர்!

**டி.ஜி.எஸ்., நெல்லை**

***காதல் சைவமா... அசைவமா?***

உணர்வுபூர்வமான காதல் சைவலவ். உடல் பூர்வமான டைம்-பாஸிங் காதல் அசைவ புலவ். ●

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57*Registered No.TN/CC(S)DN/144/06-08 Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08 Registered as a Newspaper in Srilanka.